ரம் கண்டு மூர்ச்சித்து விழுந்தனன் பாபித்திருடன். பின்சென்ற தெய்வத்தின் அஸ்தம்படவே, மூர்ச்சை தெளிந்தான் பழையவாசாமி. அபயம் சுவாமின் ஆள்கவென்றான். மநுஷ்ய தெய்வம் மூட்டையை யவிழ்த்து அவனிடம் வைத்து இதையும் அங்கீகரித்தருளுகவென்றே பிரார்த்தனை செய்யாநின்றது கண்டீர்! கண்டான் காலை காணான் றன்னை! எழுந்தான், விழுந்தான், அலறினன், உலறினன், வெய ர்த்தான், களைத்தான், மெய்யும் சிலிர்த்தனன், உள்ளம வெதும் பினன், ஆளுடையாய்! அபயம் அபயம் அபயம என்றான்! என் றன்வாழ்வே! என்னைக் கெடுத்தும் என்னைக்கொடுத்தீர், யான் செய்வதென்னே! கூறுவதென்னே! திருடனைக் காணேன், திரு டனை யெங்கே யொளித்தீர் ஐயனே என்றே கதறினன் மூதறி வடைந்தான்.

"நான்றானல்லவோ, இது நல்லூரிலே யேரிக் கரையல்ல வோ கோனன்றான் கோனனல்லவோ, என்னைக் கொண்டழித் திங் காரையவர் கொண்டணைந்தாரோ" வென்று மயங்கிய இடையன் கதையைச்சிந்திக்க.

ஜீவன் முத்தன், ஜநகன் மீண்டும் இப்பொய்யுலகத்தைக் காண வோர் முறை வருவனோ சொலீர்! வைதிகப்பெரியீர்! சுகப் பிரமத்தின் சங்கை யொழித்த ஜநகன்றன்னை அவன்றன் குலகுரு யாஞ்ஞவல்க்ய மகருஷி யோர்நாள் அளவில்லாமற் புகழ்ந்து போற் றியதைக் கண்டனர் ரிஷிகள் கொண்டனர் பொறாமை! மகருஷி தன்னைப் பணப்பேய்கொண்ட பாதகனைக்கொண்டனர் தத்தம்மனோ வாலயத்தில். திரிகாலஞானி முனிவர்பிரானும் உணர்ந்தனர் சிஷ்யர் ஞானசூன்யத்தை; திருமுகம அனுப்பி ஜநகன்றன்னைத் தமது சந்நி தானம் அடைவித்த பின்னா ஒரு பெரும் யாகம் செய்வான்றாண்டி னர். யாகம் நடந்தேறும் தறுவாயில் ராஜராஜாக்களும பற்பல ரிஷிக ளும ஒவ்வோர் சார் இருந்தனராண்டு. திடீரென ஒரு ராஜ தூது வன் அரசனருகே போந்து நகர் தீப்பிடித்தெரிந்தது நீவிர வருக வே யென்றான். கேட்டனர் ருஷிகள், கேட்டிலன் அரையன். சற்றுப் பொறுத்து மற்றோர் தூதுவன் ஓடோடி வந்தனன். எங்கள் நாயக! பொக்ஷ மொழிந்தது. பூமகள் ஓடினாள் என்றென்றே கூஉய் யேங் கலையழைத்தனன்! இரங்கினர் ரிஷிகள் இரங்கிலன் அரையன். ஒரு

நொடிப்போதில் புக்கனன் யாகசாலை ஒரு பெருந் தூதுவன். அரசே! அன்பே ! ராஜஸ்திரீகள் சாம்பினர் என்ருன். அழுதார் ருஷி கள், அழானே யரசன்! காலதூதுவன்போன்ற ஒருவன், கறுத்த குஞ் சியன், பருப்பதத் தோளினன், பரந்த மார்பினன், அலறிய சிந்தையன், அலறி வீழ்ந்தனன் அக்நி குண்டத்தில். அல்லோலகல்லோலமாயது மண்டபம். அலறினர் ருஷிகள் அலருன் அரசன். செங்கோல் கோணு மன்னர்மன்னவ! அடிமுடி யில்லா வரும்பொரு டன க்கு அடிமுடி கூறும ஆண்டவ! சரணம். பட்ட மகிஷியார் மாண்டனர்; அருந்தவப்புதல்வன் மாண்டனன்; உயிரினுமினிய நும் புத்திரியும் மாண்டனள்; கோவே கோவே மீகாவே யெனவே கோவென்றலறிக் குப்புற வீழ்ந்தனன் புண்பட்ட தூதுவன். ருஷி கள் ஹர ஹர வென்றனர், ஹரி ஹரி யென்றனர். கந்தனை யழைத் தனர். காளியைக் கூவினர். ஓவென்றரற்றினர் பெண் சேனையெனவே. ஜனகன் பெண்டையுங்காணுன், பிள்ளையுங் காணுன், பெண்ணையும் பேணுன், அவனைக் காணுன், இவனைக் காணுன், ஹரனைக் காணுன், ஹரியைக் காணுன், தங்குருநாதனைக் கலந்து சுகித்தான், குருவுங்கா ணுன், அஹமுங் காணுன், தானுய் விளங்கினுன், தானே நின்ருன்.

சுவல்ப நேரத்திற்கெல்லாம், ருஷிபுங்கவர் தம் பர்ணசாலை பற்றி யெரிந்தது. வெறிக்கவோடினர், ரிஷீசுவரர்களும், என் கோவணம் காணேனெனவே யழுதார் ஒரு பிரம்ஹருஷி. அரைப்பணம்போச்சே, என்செய்வே னென்ருர் பேதையொருவர்; அந்தச் சமயம் ஒரு பெண்மணி படத்தைக் காணகிலேனென்ருன் ஒரு சத்பிராம்ஹ ணன். திருவோடன்றி மறுவோடில்லா முனிவர்கள் பாரும் பாரும் பத்திரமாய்ப் பாரும் என்றே எழுந்தனர். பத்நி பாவாடை பார்ப்பேமென்பார், புத்ரிசிற்ருடை தேடுவேமென்பார், அட்டாக்ஷ ரத்தை யடக்கிய பலகை யெரிந்தே யொழிந்ததே எப்படி என்பார். பஞ்சாக்ரகோணம் பத்ரப்படுத்தினேன். பஞ்சாக்ர சீட்டைத் தொடு வனே தொடானே எழுநாத் தெய்வ மெனவே எழுந்தனர் ஏழை மதி யும். இன்னண மின்னணம் அலக்கண் பட்டு அவதியிலழுந்தும் பேதைப்பெரியோர் புறம்பே போந்தனர். மந்தஹாசம் தவழ்ந்த நகைகளை ப்பிரகாசிப்பித்தனர் பெரியபெருமான். யாஞ்ஞவல்க்ய ருஷி புங்கவன்ருனும் கூவினர் பலரையும், இழித்துக்கூறினர், பழித்துப்

பேசினர். பேதையீர் கண்டிரோ ராஜன் பக்தியை யென்றார் புண்ணியர், அடங்கினர் யாவரும்அஹமே யொடுங்கி என்று கூறினர் எங் குருமணியும்.

கலிமகத்வத்தைக் காட்டும் நமது ஹிந்து ஜன சமூகத்தினது தற்கால நிலைமையைச் சற்றே யாழ்ந்து பரியாலோசிப்பாம். தேசத்தைவிட்டுத் தர்மம் பறக்கவே, அதர்மம் தலைதூக்கி யாடாநின்றது. ஹிந்து தேசம் ஹிந்துக்களல்லாதார் ஆட்சியில் வருவானேன் என்றே கேட்பின் கூறுதுங் கோண்மோ. எல்லாம் சிவனது செயலேயென்க. "அவனன்றி யோரணுவு மசையாது" "அவனசைந்திடி லணுவசைந்திடும்" "அவனே யாவும், யாவும் அவனே" எனவே எழுந்த திவ்யத் தொடர்கள் யாண்டுரு சான்றே. ஹிந்துக்களாவார், தேசாபிமானம், மதாபிமானம், ஈஸ்வராபிமான முதலிய இன்னோரன்னவற்றைத் தந் தேசத்தை விட்டகற்றி, சோதர வாஞ்சையைத் தூரத்தே துரத்தி ஒற்றுமை யின்மையையே ஆபரணமாப் பூண்டு உண்மை யவலம் பியா தொழிந்ததே பரதவர்ஷத்தினராய ஹிந்து ஜனசமூகத்தினது தற்கால தாழ்ந்த நிலைமைக்குக் காரணமாய் நின்றதென்க. தானரு செய்வான் தலையைக் கொடுத்த உத்தம புண்யர் போனவிடந் தெரியாது மறைந்த பின்னர், கேளிவிலாசத்திற் காலம் கடத்தி, ராஜாங்க விஷயங்களைத் தாறுமாருக நடத்தித் தங்களை யளவு கடந்து முகஸ்துதி செய்து கிடந்த ஸ்வஜனங்கள் விஷயமாய்ப்பாரபக்ஷங் காட்டி, தர்மதேவதையை வாட்டி யோட்டிக் களித்துச் சுகித்த பலபேதை யரசரைக் கொடுங்கோன் மன்னரை மகம்மதியர் போர் முனையில் வென்று கீழ்ப்படுத்தி இடையிற் சிலகாலம் இத்தேசத்தை யடக்கி யாண்டதும் திருவருட் கடாக்ஷம் போலும். சாதிவித்யாஸ, மதவித்யாஸ, ஆசார வித்யாஸ, அநுஷ்டாந வித்யாஸ ஏற்றத்தாழ்வை யாண்டும் பாராட்டிச் சிலர் குலத்தால் பெரியர், கோத்திரத்தால் பெரியர், அங்ஙனமல்லார் பலரைச் சீறு மாருகப் பல்லாண்டு கொடுமை செய்து நடத்திய பெரும அதர்மத்தை மகம்மதிய வரசர் துன்பப்படுத்தினர். அக்பர் சக்ரவர்த்திப் பெருமான் காலத்தில் மகம்மதியர் உயர்குல ஹிந்துமாதரை மணந்தும், ஹிந்துக்களிற் பலர் மகம்மதிய ராஜஸ்திரீகளை மணந்தும், பரஸ்பரம் அன்பும், பொறுமையும் பாராட்டி மருவிவாழ்ந்த விஷயம் நந்தேச சரித்ரம் கூறுகின்றது.

மதவைராக்யங் கொண்டு பிரஜைகளைப் புண்படுத்திய ஔரங்கஸீப் முதலியோர் தாமே, தங்கள் ராஜ்ய க்ஷீணத்திற்கு முகாந்தரமாயினர். பகவான தருட்பிரேரேபனை யாவருணர்வார். சாஶ்வதமான பெரு நன்மையையே நம்மனோர் அடைவான்கருதி அன்ளுெருநாள் பாதன் ஒருகுடைக்கீழடக்கி யாண்ட இப்பெரும பூமியைக் காலக்கிரமத்தில் மாட்சிமை தங்கிய ஆங்கில நன்னாட்டா ரதனத்திற் குட்படுத்தினர் போலும் பகவான். இற்றை நான்று நம் புண்ய பூமியடைந்துள்ள கௌரவங்கட்கு அளவு சங்கியை யில்லையன்றோ? வாயுவேக மனோவேகாதிகளை நிதர்சனமா யின்னவையென வுணரப் பெற்றோம். சென்னையின்கண் வாழாநின்றவர் நாலைந்து தினங்களிற் காசி க்ஷேத்ரத்தினை யடையாநின்றனர். மின்சார தந்தியாலி சமைந்துமே, லண்டன், நியூயார்க், பாரீஸ், மொரீஸ் முதலியவாய தூரதேசங்களி லுள்ளவர்களோடு அரை நாழிகைப்போதில் வார்த்தை சொல்கின்றோம். நாவாய் கொண்டுங் கடலைக்கடப்பம். புகைக் கூண்டேறிக் ககனம் பறப்பம். இடாலி, ஜெர்மனி, ருஷியா, கனடா முதலிய பற்பல தூரதேசத்து வர்த்தமானங்களை அன்றன்றறிந்து ஆநந்தம் பூப்பம். கரும்பும் புறந்தது, கர்ப்பங் கலங்கோம். எடிசன் போனகிராபியைக் கொண்டு சீமையிற் பாடிய பாட்டைக்கேட்போம், மற்றோர் நவீன யந்திரங்கொண்டு தேவாம்ஸமான தேவி ராஜாத்தி-மாட்சிமை யுருவென வந்த பெருந்தகை - முடிமுன்னர் முடிதாழ்ந்து வணங்கும் திருவடிப்போதைப் போற்றினர் தம்மை யன்னை போற்றுங்கி யருள்நோக்கந் தந்து ரக்ஷித்த சுசீலை விக்டோரியா சக்ரவர்த்தினிப் பெருமாட்டியாரின் மரணகாலத்தே ஆங்கிலநன்னாட்டாரடைந்த அளவிலாத் துக்கக்காட்சியையும் சென்னையிற்கண்டு யாம் துக்கத்திலாழ்ந்தனம. ஒருவிதமான வாயுவை யதிட்டித்து, ஐரோப்பிய டாக்டர்கள் உடம்பின் யந்திரங்களைப் பூதக்கண்ணாடியால் காண்பராயினர். கண்ணுற்கண்டே, தக்க சிகிச்சையும் செய்வார். கம்பியின்றியே தந்தியோடுவதாம். புகையுமின்றியே வண்டிகள் நடந்தன. என்ன ஹாஸ்சரியம. என்ன ஹாஸ்சரியம்! இனி மேல் வரும் சம்பவம் யாவரறிவரோ?

புகைவண்டிக் கோவையைக்கண்டு புதுத்தெய்வ மொன்று முளைத்தெழா நின்றதெனக் கொண்டு சாஷ்டாங்க நமஸ்காரம்

செய்து, மலஜலோபாதையை நீக்குவான் கருதிப் பஞ்சமனிடம் குறியொன்று கேட்டு, அண்ணன் றம்பியை யவதியுறச்செயப் பல்லியைப் பரிந்தே பலதரம் கேட்டு, பாழ்முகப் பெண்ணைப்பாராது கொள்ளவே, புட்பம் வைத்துப் பிடாரியைக்கேட்டு, பாசைக்கோரித் திருவுளச் சீட்டைப்போட்டு, வலது கண் துடிப்பையும, இடது தோட்டுடிப்பையும், அடுப்பிற் சாதம பொங்கும் வைபவத்தையும், காகம் கத்தலையும், ஆந்தை யொற்றொலியையும், ஒற்றைப்பார்ப்பானையும், ஒரு முண்டையையும் எண்ணெய்க்குடங் கொண்டேகிய வணிகனையும் அலங்காரத்துடன் சுடலையேகும் சவந்தையும் மற்றும் இன்னோரன்ன கணக்கிடலரிய பற்பல சாமான்ய சம்பவங்களையெல்லாம் பெரு நன்மை தீமைகளைக் காட்டும் குறியெனக் கொண்டதன்றியும் கடிமணம் கருதிச் செடிக்கு முடிபோட்டு, அடுப்பைப் பரக்க வமைப்பார் நீங்கலாக ஏனைய பெரியோர்மேற்புல விஞ்ஞானசிலர் அனுபவசித்தமாய் வெளிப்படுத்தியுள்ள பூதபௌதிக சாஸ்திர முடிபுகளை யாசிரயித்து வாழாநின்றனர். ஹிந்துக்களிற் பெரும்பாலார் தற்சுதந்தர ஹீனராய்க் கிடந்தவர்கள் இப்போது ஸ்வதந்திரம் பெற்று, ஐரோப்பிய புண்ணியர் கிருபை கூட்டுவிக்க வேதமுமோதி யுண்மையுணர்ந்து அடிமைத்தனம் நீக்கி ஸ்வதந்திரம் தந்த ராஜாங்கர் செல்வரிடம உள்ளபடியே உள்ளன்புள்ள மாதராரென்ன உள்ளன்பைக்காட்டி ஓருருவா ராயினர். ஜாதிபேத, மதபேத, வர்ணபேத, ஆசாரபேத, இனபேதாதிகளைத் தழுவிக்கொஞ்சிய பாரபக்ஷங்கள் பஞ்சாய்ப்பறந்தன. கல்வித்திறன் உத்யோக நிர்வாக சக்தி, ராஜவிசுவாசம, ராஜப்பிரதிநிதி முதலிய பெரியோர் விசுவாசம, அசையாத சிந்தை, அழியாத உள்ளம், புத்தி விசாலம், பெருந்தன்மை, பராக்கிரமம், வாக்கு வல்லபம, அளவற்ற ஊக்கம், இன்னோரன்ன நற்குண பூஷணம் பூண்டு, கம்பீரமான தோற்றமு மடைந்து, காருண்ய மென்ற வற்புதத் தெய்வத் தன்மையைத் தத்தமிடம் பிரகாசிப்பித்த பெரியோர்களே (அத்தகைப் பெரியர், எந்தச்சாதி, எந்தக்குலம், எந்தக் கோத்ரம், எந்தப்பரம்பரையில் வந்தவராயினுஞ் சரியே) உந்நதவுத்யோக பெரும்பதவிகளை நமது சிறந்த துரைத்தனத்தார் கொடுத்து யோக்யதை யுள்ளவர்களையே யாதரியா நின்றனர். அவரவர் தத்தம்மத விஷயங்களிற் சுவேச்சையாய்ப் பிரவர்த்தித்துக் காலங்கடத்த யாதோராடங்க மின்று. வைணவன் ஒருவன் சைவனாகலாம். சைவர்பலர் நாமம் போடலாம் சைவன்

வைணவன் பௌத்தன் முதலியோர் ஆஸ்திக சமாஜமடைந்து வர்த்திக்கலாம். நாத்திக னொருவன் ஆத்திகம் பழிக்கலாம். சூத்திரனொருனும் வேதமோதலாம். பார்ப்பனர் பற்பலர் நடவாநின்ற பெருஞ்சாலையிலும், சிறு வீதியிலும், பஞ்சமனேனும் ரதமேற் கொண்டும், அஶ்வமேற் கொண்டும் சவாரி சாரியாய்ச் செய்யலாம். அசைக்காரொருவரும். சூத்திரனொருவன் பிராமஹணர் பலரைப் பணிவிடை கொள்ளலாம் படியும் கொடுக்கலாம். வைதிகன் செல்லும் தாசிவீட்டை அவைதிகன் அடைய ஆக்ஷேபமில்லை. ஹிந்து மதஸ்தன் கிறிஸ்தவனாகலாம். உபய மதஸ்தரும் புத்தரைப் போற்றலாம். கொரான் படிக்கலாம். ஐரோப்பிய லேடிகள் அட்டாங்கயோகம் பழகலாம். ஞானம் பேசலாம். இளங் கைம்பெண்ணும் இஷ்டப்பட்டால் வதுவையைக் கோரலாம். அவரவர் ஸ்வதந்திரம் அவரவர்க்குண்டு. ஆயினும், அத்து மீறிச் சட்டவிருத்தமா யொன்று செய்தல் கூடாது. ராஜத்துரோகம், அதிகப் பிரசங்கம், மூடப்பிடிவாதம், பொய்யபிமானம், இவைகளை கனவினும் சிந்தித்தல் கூடாது கூடாது. நரபலி, நரமேதயாகம், முற்றும் கூடா. உயிருடன் ஸ்திரீயை வதைப்பது மடாது. கொளுத்துவதீடாது. அவளுமே உயிருடன் பிணத்தைப் பேணியும் சாதலமையாது அமையாது கண்டீர். கைகொட்டும் வித்தை கால்தட்டும் வித்தை முதலிய மூடர் செய்கையும் குற்றமாம் அபக்குவியான பெண்மணி போகம் புருஷனும் விரும்படாது. இயற்கைக்கு மாறாக, சட்ட விருத்தமாக, சிற்சில விஷயம் செய்தலும் குற்றமாம்.

II. பிரஶ்னை: ஹிந்துக்களது நன்மையைநாடி, தேசாபிமானம் பூண்டு பிரவர்த்திக்கத்தக்க யோக்யதை யுடையார் யாவர்?

உத்தரம்: ஆங்கில பாஷாஞானம் பழுத்த பண்டிதமணிகளே யாமென்க. ஆங்கிலமொன்றே லோகத்திலிப்போது பிரசித்திபெற்றிருப்பதை யுணர்க. ஆங்கிலபாஷா விற்பன்னரே மனோவிசாலமடைந்துள்ளாரென்ற வுண்மை சொல்லாமலே விளங்கும். குக்ஷியைப் போஷிப்பது மொழிய, அறிவை வளர்ப்பது மதுவேயாம். அப்பாஷை சுக்லபக்ஷத்து சந்திரனெனத் தினே தினே வளர்ந்து வருவதை யறிவுடையோர் காண்பரன்றோ? அது தங்கமென வொளி தந்து, தங்கமபோல் எந்தவிதமாக வமைப்பதற்கும் இடந்தந்து பிரயோசனம் செய்யாநின்றது. சர்வபாஷைகளிற் போந்துள்ள சர்வ

சாஸ்திரங்களேயும் மணிகளேயும் பொறுக்கிப் பொறுக்கி யெடுத்துத் தன்னே யலங்காரம் செய்யாநின்றது. தன்னே விரும்பி யடைவாரைத் தாஞக்கிவிடும் சமர்த்து மமையப்பெற்றது. நமது திவ்ய தேசத்தில் ஆயிரம் வகையினராகி, ஆயிரம் பாஷையினராகி, ஆயிரம்விதமான வேறுபட்ட கொள்கையினரா யிருநதோரைத் தன்துவாரா வேரே வகையினராக்கிச் சோதர விசுவாசம் வளர்த்து ஆரியராக்கி மேம்பா டடைவித்துப் பிரயோசனம் செய்யாநின்றது. திராவிட தேசத்து நாயுடு வொருவரையும், வங்காளநாட்டின் பிராம்ஹணகுல ஸ்ரீமா ட்டி யொருத்தியையும் மருவசெய்து, பிரபலமாஜமண்டப மடைவித்து பரமேசுவரன் திருமுன்பு கடிமண முடிப்பித்துக் கலக்கச் செய்ததும் அதுவே. எங்குருமணி ஸ்ரீமத் விவேகாநந்த பரமாம்ஸ மூர்த்தத்தை ஷிகாகோ கொண்டு சென்று, அமெரிக்கா ஐரோப் பா கண்டங்களில் அவர்க்கு அபார கௌரவ மடைவித்ததும் ஆங்கிலமென்க. லேடி அனிபெசன்ட் அம்மையை நாத்திக மொழி த்து ஆத்திகம் புகுவித்து லோகத்திற்கு அளவிலா க்ஷேமம் செய்வித்ததும் நமது ராஜபாஷை யென்ப. ஆகவே, எவ்வளவு தான் ஒருவன் இதர பாஷைகளில் வல்லவனு யிருப்பினும் ஆங்கில முணராஞயின் அன்னவன் இந்தக்காலத்தில் பிறர்க்குப் பிரயோ சனம் செய்தல் செய்வித்த லசாத்தியமென்ப.

III. இதை நிருபணம் செய்ய வேற்ற திருஷ்டாந்த முண்டே யோ ?

உ. வேண்டுவன வுண்டு. அதற்குக் காங்க்ரஸ் (Congress) மகா சபையே பெருஞ்சாக்ஷி யென்க.

IV. காங்கிரஸ் மகாசபையினது முக்ய வபிப்பிராயங்கள் யாவையோ ?

உ. ராஜ விசுவாசத்தைப் பிரஜைகட்குப் போதித்தல், ராஜாங்க சம்பந்தமுள்ள பிரபுக்கட்குப் பிரஜைகளது கஷ்டநஷ்டங்களே யெடுத் தோதியவரவர்களது க்ஷேமத்தை யபேக்ஷித்துச் செய்வன யாவும செவ்வனேசெய்வான் பிரார்த்தித்தல், ராஜாங்கப் பிரபுக்களே இத் தேசத்துக் கவர்ன்மெண்டார் வருவாயைச செலவழிக்கும் விஷய மாய்ச் சுதேசிகளது பிரதிநிதிகளின் அபிப்பிராயங்களே யலக்ஷியம செ ய்யாது நடந்துகொள்ளும்படி வேண்டிக்கோடல், யாட்சிமைதங்கிய

லியூடெனன்ட் கவர்னர், கவர்னர், கவர்னர் ஜனரல் பெருமான், இன்னோரின் ஆலோசனை சபைகளில் ஜனப்ரதிநிதிகள் மென்மேலும் ஆதரிக்கப்பட்டு வரும்படி ஹோம் கவர்ன்மெண்டாருக்கு விஞ்ஞாபனம் செய்தல், ராஜாங்க விஷயங்களை யாவரும் எளிதிலுணருமாறு வேண்டுவன செய்தல் செய்வித்தல், பிரஜைகள் ஒற்றுமை வளர்த்து ஐக்கியம பூண்டு விளங்குவான் முயலல், ஏகேஸ்வரோபாசனையாம் வித்திட்டு, குருட்டு நம்பிக்கை கூடாவொழுக்கமென்றோதி, மதப்பேய்களைக் காலக்கிரமத்தில் மாய்ந்தொழியச் செய்தல் முதலியனவாம்.

V. பிரச்னை: காங்கிரஸ் சபையைத் தொடர்ந்து நிலவும் கான்பரன்சு சபையினர் உழைப்பின் பிரயோசனம் யாதோ?

2. உத்தரம்: இறைவனருட்பிரசாதம நமது சக்ரவர்த்தி பெருந்தகையாரது இந்திய ராஜ்ரிய தந்திரங்களாருமம பெரியோர், கவர்னர், கவர்னர்ஜனரல், செக்ரடரி ஆப் ஸ்டேட்பார் இண்டியா முதலிய உன்னத பதவி யடைந்தோரிடம பிரஸ்தாபியாமலே, நம்மனோர் தாங்களே சந்தர்ப்பானுகூலத்தபாகச் சீர்திருத்திக்கொள்ளக் கிடந்த விஷயமாய்ச் செய்யவேண்டிய நடவடிக்கைகளையே இந்த சபையினர் பெரும்பாலும கவனிப்பா ரென்றனர் போலும!

VI. பிரச்னை: இந்துஜன சமூக சீர்திருத்த சபையினர் ஆங்காங்கும், அவ்வப்போதும், சங்கேதத்தினர்க்கு வெள்ளிடைமலைபோல் விளக்கிக் காட்டிவராநின்ற விஷயங்கள் யாவைதாமோ?

2. உத்தரம்: கண்மூடித்தனமாய் விஷஜ்ஜல பானம செய்து, விஷஜ்ஜலமுண்டு வாழாரிக்கும நம்மனோரை சநாதன சாஸ்திரவிதி விலக்குகளை யநுசரித்து நடந்து கொள்ளும்படி தெருட்டுதல், திவ்ய க்ஷேத்திர மடைந்த வதிரீ புரோஹிதியோர் திருக்குள மணுகி ஒரு துறைப் படிந்து அடித்தடித்திருந்து அரைநாணிகளாய் முடிந்து, புனலாடிக் களையேறும் நாகரிகவைபவ மிற்றைநாள் அரங்கமென்றிடித்துக் கூறல், மட்டித்தனமாய்ப் பல வூர்ந்து உயர்குல, உயர்குடும்ப ஸ்திரீகள் பெருங்கும்பல் மத்தியிலகப்பட்டு, முன்னே மூக்கணிடிக்க, பின்னே கடையான பிடிக்க, இருமருங்கும முழுமூடர் நெருங்கியணைய அலக்கணுற்று, பரமேஸ்வரனது திருவுலா முதலிய சேவை செய்தலடாதென வற்புறுத்திக்கூறல், பிராம்மண, க்ஷத்ரிய,

வைசிய, சூத்ர வர்ணபேதங்களை உள்ளபடியே அறிவுடன் றழுவி, கணக்கற்ற ஜாதி வுட்பிரிவுகளாம் கிளைகளைக் களைந்தொழிப்பான் போதித்தல், பாலிகா விவாகம் பட்டொழியச செய்தல், தத்தம் பிள்ளை பெண் குறிப்புணர்ந்தே மணவினை முடித்தல், சந்தர்ப்பாநுபத்தமாக வைதவ்யமடைந்த இளம் கைம்பெண்கட்கு புநர்விவாகம் செய்வித்தல், செய்விப்பான் போதித்தல், கைமபெண்களை யருளோடு வாதரவு செய்துகாத்தல், அநார்ய, அநாகரிக, அநாவசியமான சிறுவருமிகழும் துக்கக் கொண்டாட்டங்களையும், நடனோர்ச்சவங்களையும் தடுப்பான்றாண்டல், கலியாண டபபங்களையும், கருமாந்திர ஆரவாரங்களையும் கண்டித்தல், போலிப்பண்டாரங்களையும், வேசி தலைவாசல் காத்துக்கிடந்த பொய்ச்சந்யாசிகளையும வெறுத்து, பாத்திரமறிந்து பிக்ஷையிடல், ஆடுச்சண்டை, கோழிச்சண்டை படாடோப பாணவேடிக்கைகளாதியவாய அசத் விஷய வியாபாரங்களில் பணத்தைக் கரிபொரியாக்காது சந்மார்க்கத்தை நாடல், நமமனோரைச சத்சங்கமபேக்ஷிக்கச் செய்தல், மணப்பெண்ணை யுபசரிக்கவும் மணவினையருங்காக்ஷியைக் காண்பான்போந்த பெரியோர் முதியோர்களைக் களிப்பிப்பான் கருதியும வேசித்தாசியை வேண்டி வருநதித் தாம்பூலம் வைத்தழைப்பதைக்கடிதல், சுபாசுப விசேஷகாலங்களில் சத்பிராஹ்மணர் ஓதும் மந்திரங்களி னர்த்தபுஷ்டியை நம்மனோர் தரிசிப்பான் செந்தமிழில் படிக்கச செய்தல், வேதாந்த பிரசார விற்பன்ந விவேகிகளைக்கொண்டு வேதாந்த ஹிதோபந்யாஸம வேண்டுமளவும் செய்வித்து வீணர் வீண்வாத துர்நாற்றத்தைப் போக்கி யாண்டும் சைவ நன்மணம் வீசச்செய்தல், நந்தேசாபி விர்த்தியை யன்புட னறிவுட னபேக்ஷித்து, வியவசாயம், கைத்தொழில், யந்திரத்தொழில், சித்திரவேலை, சிற்ப சாஸ்திரம், பற்பல நவீன சீமைசாஸ்திர வேலைகள் முதலியவாய பலவரிய பெரியவிஷயங்களைக் கற்றுணரும்படி விவேகிகளைத் தூண்டி, கப்பல்யாத்திரை செய்யவிடாது தடுத்த பிரதிபந்தங்களைத் தொலைத்து அன்ன வறிஞா அதுவிஷயமாய்க் தூரதேசம் சென்று லௌகிககலைபயின்று திரும்புவான் ஏற்பொருளுபகரித்து, தேசாபிமானம பூத்துத் தழைத்துத் தோன்றல், எந்தக் காலத்தும், எந்தத் தேசத்தினாடைந்த வெந்த கௌரவங்கட்கும் பெண்பாலார் காரணமாகக் கொள்ளக்கிடந்தனராதலான், நந்தேசத்துப் பெண்மக்கட்கு ஏணியேற்றம காட்டி, அல்லிமாலைதந்து,

புலந்திரன் தூதைப்புகட்டி, அற்பத்தனத்தை யூட்டாது, பெருங்கல்வி வழங்கியவர்களைச் சேதனராக்குவித்தல் முதலியனவே யாமென்று கூசாது கூறுப.

VII. பிரஶ்னை: கீழே போந்த வின்னோரன்ன சீர்திருத்தச் சிறப்புகள் காலக் கிரமத்தில் நம்பனோ ரடையாதொழியா ரென்று சித்தாந்தம் செய்தற் கேதுவேதேனுமுண்டு கொலோ? இத்தகைய நலங்கள் இத்தேசம் அடைந்து கிடந்த பிராசீன காலமொன்று வரையறுத்துக் கூறலொண்ணுமோ? மேற்புலத்தாரது நவீன நாகரிகங்கள் நாமடையக்கோருவது பயன்படுமேயோ? ஐரோப் பியரது நடையுடைபாவனை நமக்கடுக்குமேயோ? ஐரோப்பியர் முதலிய அந்நிய தேசத்தினருடன் நாம் பொருந்தி யுறவாடி நகை யாடி யுரையாடி மகிழ்தல் சம்பவமேயோ?

உத்தரம்:—காலதேச வர்த்தமானங்களைத் தழுவியே யாவத் சம்பவங்களும் இப்பூவுலகில் நிகழாநின்றனவென்க. பிராசீன ஹிந் துக்கள் சுதேசச் சீமாட்டிகளை யடிமைகளாக்கியே யாண்டுவந்தன ரென்று சொல்ல நியாயமில்லை. மகம்மதிய ரித்தேசம் வந்தடைந்த காலத்திற்குமுன் நமது பெண்பாலார் ஆண்பாலாருடன் யாண்டும் மருவி வாழ்ந்து சுகம் பெற்றனரென்பதற்கும், பர்டா வழக்கம் பழை மை யன்றென்பதற்கும் சாதனங்கள் அளவிறந்து கிடப்பன. ஸ்திரீ கள் மகா பாண்டித்யமடைந்துப் பிரகாசித்தனர்க ளென்பதற்கும் ஐயமில்லை. சீதை, சாவித்திரி முதலியோர் சான்றும். பற்பல ஸ்திரீ கள் போர்க்களம் புக்குப் பொலிவெய்தினரென்பதும் கேட்கிறோ மன்றோ? ஸ்திரீகளின் சுதந்தரம் ஆங்காங்கும் புராணேதிகாசங்களிற் படிக்கப்படுகின்றன. சுயம்வரம்காக்ஷிநியாயமன்றோ. சீதை நற் கதையும், துரௌபதை சரித்திரமும், பத்மாக்ஷி காதையும், சகுந்தலை வாழ்வும் நாம் கண்டது கண்காக்ஷி; குட்டி கலியாணம், குழந்தை கலி யாணம் முதலிய வஸம்பவம் யாண்டு மசம்பவம். பிராம்ஹணர் பலர்க்கு க்ஷத்திரியமணிகள் வேதமோதினர், சத்தைத்தெளித்த னர். க்ஷத்திரியப் பெரியனும் பிராம்ஹணனுயினன். பிராம்ஹணர் சூத்திரர் போசனம் செய்தனர். விதவாவிவாஹம் வேண்டப்பட்டது. தமையந்தி விஷயமாய்ப் பேசப்பட்ட இரண்டாம் சுயம்வரம் பெருங் கரிபோலும். ஜாதி பேதங்கள் மலையிலக்கென்ன நின்றனவல்ல "அங்கர், அருணர், அவந்தர், ஆந்திரர், இலாடர், மராடர், கரிசர், கலிங்

கர், கன்னடர், காஸ்மீரர், காந்தாரர், காம்போஜர், கேகையர், கேரளர், கொங்கணர், கொல்லர், குடகர், கோசலர், சிங்களர், சீனர், சோழர், சோனகர், திராவிடர், தெங்கணர், நிடதர், நேபாளர், பப்பரர், பாஞ்சாலர், பல்லவர், பாண்டியர், மகதர், மச்சர், மாளவர், துளுவர், வங்கர், வங்காளர், விதர்ப்பர், விந்தியர்" முதலிய ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்களும், பிரஜைகளும், சாதி வித்யாஸம், தேசவித்யாஸம், ஆசாரவித்யாஸம், அநுஷ்டாந வித்யாஸம், கருதாராகி ஒருவரையொருவர் கொண்டாடிக் குலவி, இந்த ஸ்திரீயை யந்தப்புமானும் பரஸ்பரமாகவே ரஞ்சிதமாகக் கொஞ்சி மருவிக் கடிமணம் புரிந்துக் காலங்கடத்திய காதைகள் கோடாகோடியுந்தானும் நாம் கேளாதொழிந்தமோ கூறீருலகீர். இடையிற் றோன்றிய வாபாசங்கள் இடையிலொழிவது மழகே யழகே! பர்மா வடைந்த நமது தேசத்தவர் பலர் பர்மஸ்திரீகளைக் கலந்து பெற்ற செல்வச்சிறார்கள், சிறுமியர் தங்களைக்கண்டோம். ரத்நக்கட்டிகளென்றோம். தத்தம் குலத்தின் சிறுமையைப் பணத்தால் மறைத்துக் கோத்திரமுணரா தொழிந்த பலமாக்கள் கல்வியறிவானும், குணவிசேஷத்தானும், கௌரவ அந்தஸ்தானும் பெரியராகாரோ? இழிந்த வகுப்பினரும், சாதியற்றவரும் பணமுண்டானால், சில சமயம் முதலி, நாயடு, பிள்ளை முதலிய பட்டம் வகிக்கக் கூசுவதுண்டோ? ஆரியப் புமானும், அநார்யஸ்திரீயும் கலந்து பெற்ற சிறுவர்தாம் மேன்மையடைந்து மேன்மக்களா யொழுகுவது கூடாமையோ? படித்த பெண்களோ பாழாய்ப்போவார்? படியாத நாரியர் பதிபக்தி யொழிந்து நடந்ததை யாண்டுமே நாம் கண்டதுமிலையோ? விதவையை மணந்தார் துறக்கமெய்தாரோ? எழுபதும் சென்ற ஏழைமதிக்கோ ஏழுவயதுப் பெண்ணைக் கொடுப்பது? பாலிகா விவாஹம் பொம்மை விவாஹமே, அதனினும் கேடே யென்பதும் பொய்யோ? ஐரோப்பிய பிரபுக்கள் ஆசாரந்தானும் அழகு செய்யாதொழிதலேனோ? இற்றைநாள் நம்மவர் பலர் உண்பது முடுப்பதும் ஆங்லதுரைகள் மாதிரியன்றோ? டீஸ்பூன், டெசர்ட்ஸ்பூன், டேபில்ஸ்பூனும் ஹிந்துக்கள் கிருஹங்கள் பலவற்றை யடையோமென்றே முறையிட்டனவோ? ஹிந்துமதஸ்தர் பலர் பூட்டைக் கழற்றாமல் கோட்டைக்கழற்றாமல், பூர்வாசாரத்தைக் கைகழுவிவிட்டு, டோஸ்டென் டீயும், ஐசும், சோடாவும் ஆர்வத்துடனும் ஸிப்-(sip)

செய்துண்டே களியாட்டயர்ந்த காக்ஷியைக் காணிரோ? இக்காலத்தில், நம்மனோர் பலர் அகத்தினுள்ளே சென்றபோது பாடும் பாட்டை, அத்புத சிருங்காரலாவண்ய மமைந்த பப்ளிக் ரேஸ்டாரண்டுகளில், முற்றும் மறந்து ஒழுகுவதில்லையோ கூறுகஉலகே? வைதிகமுதியோர், நாத்திக விளைஞர் சேர்ந்துவாழும் குடும்பங்கள் இந்தப் பிரதேசத்தில் மருந்துக்கும் கிடையாவோ சொன்மின் நண்பர்காள்! ரயில்வே ரிபிரஷ்மெண்டு ரூம்களில் டின்னர் புசித்து ஆயாசம் போக்கிக்கொள்ள ஹிந்துமதஸ்தர் யாவரேனும், ஒருநாளேனும் சென்றதில்லையோ நவில்மின் நவில்மின். புகைக்கப்பல்களில் சுதேச ஸ்திரீபுமான்கள் சிலர் ஐரோப்பியருடன் போசனம் செய்த நாளே கிடையாதோ ஆரியச் செல்வரே! சொன்மின் சொன்மின். ஆங்லருறவு நம்மவர்க்கடாதோ? ஏனோ தகாது கூறுமின் நீவிர்! சின்னாள் முன் மாக்ஷிமைதங்கிய நமது கவர்னர் பெருமான் லார்டு ஆந்த்தில் துரையவர்கள் தர்ம பத்நியார், நமது அன்னையாவார், தர்மமே வுருவென வந்தவர், தாக்ஷண்யமே குணமெனப் பூண்டவர், அன்பே யாபரணமா யணிந்தவர், அருளே பொருளென மதித்தவர், சுதேசச் சீமாட்டிகட்குக் கெண்டித் தோட்டத்தில் விருந்திட் டுபசரித்த வைபவத்தைக் கண்டார் கேட்டார் எவரும் அப் பெருமாட்டியாரைத் தெய்வமெனப் பூசிப்பாராயினு ரென்றால், ஐரோப்பியரது அன்பின் பெருமைக் களவுண்டேயோ? நமது கவர்னர் பெருமானது உதார குணத்தையும் அறிந்து போற்றாத நம்மவரெவரோ? நமது மதபோதனையை நமக்கே செய்யும் அம்மை மிஸ்ஸஸ் ஆனிபெசன்ட்டும் அம்பா ளம்ஸமேயென்று கொண்டிலமோ? அம்பாசமேத னவதாரவிக்ரஹம் ஆதிசங்கரர் தம் ஆணையே சத்யமென்று முழங்குமெங்குருநாதன் சிஷ்யை யாவார் சிஸ்டர் நிவேடட்டாவம்மையும் ஐரோப்பிய ஸ்திரியே யென்றால் அவர்தம் பெருமையைச் சொல்வது மெளிதோ? எத்தனை ஸ்திரீகள் ஆயிரமாயிரம் காவதம் தூரம் தந்தேசம் விட்டு, இத்தேசமடைந்து, நமது நன்மையைக்கோரி நன்மையைச் செய்யா நின்றனர் அறிமின் நண்பர்காள்! எனவே, சென்ற நூற்றாண்டும், இந்த நூற்றாண்டும் சிறந்தனவென்றே முழங்குமின் சங்கம். இனிவரு[illegible] புடன் பிரஜைகாள்! ஆங்ல நாட்டார்க்குப் பல்லாண்டு கூறுமின். நம் சக்ரவர்த்திப் பெருமான் ஆளுகை நீண்டே யோங்கி யாண்டு தழைக்கத் தொழுமினெம்பிரானை!!!

VIII. பிரஸ்னை: கீழே பிரஸ்தாபித்தன நீங்கலாக ஹிந்துக்களது இன்றியமையாக் கடமை மற்றேதேனு முண்டோ?

உத்தரம்:—உண்டுண்டு. அஃதுலகத்திற்கு அநித்ய சம்பவங்களையங்கங்கே சுட்டிக்காட்டி, அஞ்ஞானமோட்டி நித்தியஞான மெய்ப்போது மூட்டிவைத்தலையே மேற்கொண்ட தர்மமென்க. இக்கர்மபூமியில் வாழாநின்ற வொவ்வொரு ஜாதியாருக்கும் ஸர்வேஸ்வரன் ஒவ்வோர் தர்மத்தை யனுஷ்டித்தலையே விதித்துள்ளார் போலும். பரத கண்டத்தினர் எப்பொழுதத்தும் மறுமை ஞானத்தையே தழுவி நின்றனரென்றே பண்டித மணிகள் கூறு நின்றனர். வியவகாரத் தழுந்தியு மழுந்தாது விஷயத்தை விஷத்தினுங்கொடியதெனக் கடிந்த மஹாநுபாவர் லக்ஷக்கணக்கா யாண்டும் பிரவர்த்தித்த புண்ய பூமியிதுவேயாம். நம்மனோர் உண்ணும்போதும், உறங்கும்போதும், களிக்கும்போதும், துக்கத் தாழ்ந்தபோதும், சுபத்திலும், அசுபத்திலும், ஈஸ்வரஞானம் பேசாது விட்டனரில்லை. கல்வி நாற்றமில்லாத கைம்பெண்கள் தாமும் கர்மமுரைப்பர், ஞானம் பேசுவர். பரஸ்திரீகமனமே பிதுரார்ஜ்ஜிதம் என்ற காமுக நாயாம் பாதகனேனும் கந்தன்றனக்கும் அவனைத்தந்தோன்றனக்கும் இரட்டைத் தேங்கா யுடைப்பேனென்பான் எண்ண மீடேறவே! குற்றமற்ற தர்மசிந்தை தழைத்த வழிப்போக்கரையும் துன்பப்படுத்திப் பொருள் பறித்தோடும் கள்ளப்பயலும் ஆலடிப்பிள்ளையாரை யன்புடன் தொழுவான். ராந்த மேனியர் சாதுக்கள் நிலையையும் கூறவும் வேண்டுமோ கூறீருலகீர்! எமது கூற்றினை நிதர்சனப்படுத்த ஜனகனோர் சான்று. "வேண்டேன், இம்மாயப்புன் பிறவி வேண்டேனே" வென்றோதிய ஸ்ரீராமபிரானே பெருங்கரியாவர். உடலம் சித்ரவதை புண்ணினும் தர்மமே கதியென்றறைந்த தருமன் சாக்ஷி. உடலுயிரிழுப்பினும், கதியையே யிழுப்பினும் யாதேயெய்தினும், யாதே யொழியினும், ஞாயிறு நிலைமாறினும், சிவனே தடுப்பினும், கட்டுரையிழுக்கிலம்—என்றே ஓதிய பிரபு ஹரிச்சந்திரன் புராண புராணமே புண்யம் புண்யம். சேற்றிற்பூத்த செந்தாமரையென இழிந்த ஸ்தானத்திலுதித்தும் நந்தன் எய்திய பேற்றை யுணர்க வுலகம். அடங்குவராக பேதைமாக்கள்.

IX. பிரஸ்னை:—ஹிந்துஜன சமூகத்தினைச் சார்ந்து வர்த்தியாநின்ற யாவர்களும அவலம்பித்த நித்யாவசியமேயென வுணரக்கிடந்த பெருநூலொன் றுண்டு கொல்?

உத்தரம்:—உண்டு: அதுவே, வேதமெனப் பேசப்பெறும், அருமறை, யனாதி, ஸ்வயம்பு, சத்தியம், சுருதி, ஈச்வரப்பிரஸாதம், இரகஸ்யம், அபௌருஷேயம், எனப்பேசப்பெற்ற தென்க. "முனைவன் கண்டது முதநூலாகும்" எனப்பெரியோர் பணிவுடன் பரிந்து பணித்தவாறே, அது முதுநூல், முதநூலெனவுங் கேட்கப்படுமென்க. அது அணுவாதி, ஜடவாதி, பூதவாதி, காலவாதி, மாயாவாதி, ஆஸ்திகவாதி, நாஸ்திகவாதி, ஏகேச்வரவாதி, அநேகேச்வரவாதி, ஏகாத்மவாதி, அநேகாத்மவாதி, துவைதி, விசிஷ்டாத்வைதி, அத்வைதி, பழமைவாதி, புதுமைவாதி, சததியவாதி, அவாந்தரவாதி, நிஷ்காம்ய கர்மவாதி, பிரபத்திவாதி, ராஜயோகவாதி, மெய்ஞ்ஞானவாதி, முதலிய பல்வேறுபட்ட வாதிகட்கும் ஆதாரமாய் நின்றதென்க. சைவனுதல், வைணவனுதல, சாக்தனுதல, காணுபத்யனுதல், பௌத்தனுதல், ஜைநனாதல், கிறிஸ்துவனுதல், யாவனுதல், வேதத்தைத் தவிர்த்து உண்மைகூறப் புகுந்தானெனல் யாண்டும் அசம்பவமெனவே முடித்தனராரியா. ஈசவரஸ்வரூபரான ஈச்வரனது திருவுள்ளத்தினையே இடமாக்கொண்டு விளங்கு மவ்வேதமென்று முரைத்தருளினர் எம்பெருமானர்கள்! அவ்வேதந்தானும் யாண்டும் மந்திர ரூபமாய்ப் போந்தமெனவே, அமமந்திரங்களைத் தரிசித்தவர்களைத் தாம் ருஷீஸ்வரரென வழைத்தது வழிவுடையுலகம்! ருஷி: என்ற பதம மந்திரத்திரஷ்டா என்ற பொருள் தருமென்ப மேலோர்! தத்தம ஹிருத் புண்டரீகத்தில் குடியேறிய பகவான் பிரகாசிப்பிக்கப் பிரகாசமாயினபோதும வேதமந்திரங்கள் மஹாருஷிகட்கு; அக்காரணம பற்றியே யமமந்திரங்களை யன்னர் உணராதுணர்ந்தனரென்று கூறுப. அன்றொருநாள் கல்லாலவிருக்ஷ நீழலிற் போந்து சின்முத்திராங்குசக் கோலங்காட்டி சனகாதியோரை யாட்கொண்டு ரக்ஷித்த சங்கரன் பேசாதுபேசிய திறத்தை யாவரறிவார்? பல்லாயிரம் பிரஜைகள் ஒருங்குசேர்ந்தவொரு பெருஞ் சபையின்கண் தனதின்னுயிர்க் காதலனைக்கண்கள் செய்தபாக்கியமாக் கண்ட காமக்கிழத்தி, காதற்பூத்துக் காதலனோடு நேத்திரசம்பாஷணை செய்து, அந்த: கரண சூக்ஷ்மதேஹம் நுவாராவணைந்து சுகித்தமனோ சையோகப் பரிணயப்பிறு லத்வைதம் பெற்று அவனைப் முடிந்து நின்ற கண்காரியாவ ரறிவார் கூறுகவுலகே! கண்ணன் காண்டீபனுக்குபதேசித்த கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், தன்

ணன் றிருவாக்கி னின்றும் வெளிப்போந்ததற்குக் குருக்ஷேத்ரம் என்ணும் அவகாசம் தந்ததோவென மயங்குவர் பலமாக்கள். ஒரு சிறுகணப்போதில் ஒரோவழி, சாமான்ய மக்கள் தாமும், ஒருபுருஷ ஆயுசின் பற்பல வைபங்களை யநுபவித்துக் கண்விழித்த சத்தியம் சத்தியமன்றோ? வேதம் ஏனோ பற்பல சிறுமார்க்கங்களைப் போதியா நின்றது வாங்காங்கு? அதனநந்தத்திற் பெறப்பட்ட வுண்மைகளை யேனோ பிரகிருதத்தில் அதுபோதியாது விட்டது? ஏனோ சந்திரனைப் பிரம மென்றது? சூர்யனைத் தெய்வமென்றது? அக்நியைத் தொழச்செய்தது? இந்திரனை யடையச் செய்தது? நான்முகனை யனுகவிதித்தது? ஆறுமுகனை யணையச் செய்தது? ஹரியைப் பரதேவதை யென்றது? ஹரனையே சங்கர னென்றது? "ஏகமே வாத்விதீயம் பிரஹ்மா" வென்ற ஞானம் முடிந்த பதமன்றோ? அகம் பிரம்ஹாஸ்மி, தத்வமஸி, அயமாத்மா பிரம்ஹா, பிரச்கியாநம்பிரம்ஹா வெனவெழுந்த மகாவாக்யங்களையே பண்டிதர் பாமரர் யாவர்க்கும் தாம் ஏனோ வைதிகர் போதியாதொழிந்தனர்?

இதற்கு ஏற்ற இறைபளிப்பம் கேண்மோ? லோக சம்ரக்ஷகன், லோகைக நாதன், கண்ணனெம் பெருமான் அர்ச்சுனன் றனக்கு சாங்கிய யோகம் முதலிய மார்க்கங்களை ஏனோ போதித்த பின்னா 18-ம் அத்யாயத்தின்கண் பிரபத்தியாறினை நவிலுமுலகே!

"சர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம்சரணம விரஜ" வென்ற பெருநெறியை முதலத்யாயத்திற் சொலாதேன் விட்டார்?

சாம்பவசிரோமணி பிராம்ஹணர் ஒருவர் கலைஞான விக்ரஹமாய்த் தழைத்து விளங்கினர். அவர்க்குப் பேரனொருவன் ஐந்தாட்டையன் அறிவே யுருவாய்ப் போந்த குழந்தை யொருவன் றானுமிருந்தானென்ப. ஒருநாள் வடமொழி யோதிய பாலன் தாதக ख ग घ கஷ்டம் கஷ்டம்! காலம் நஷ்டம் நஷ்டம! வேண்டேன் வேண்டேன் क,ख,ग,घ, சரியனை விலைக்கே வாங்கியதொக்குமே. உடனே பாஷ்யம் வோதுமே யெனக்கு—என்றனனென்ப. வேதம், பக்குவ முணர்ந்தே யோது முண்மையை, கண்ணனும பக்தனைப் படிப்படியாக ஏற்றினர் வீட்டில்; மெதுவாகவும் மெல்லென மெல்லெனச் சொல்லுவர் சந்தை. தேஹமே பொருளெனக் கண்ட முழுமகன் பிராணனை சத்யம் என்பான் ஒரோவழி; மீண்டும் பிராணன்

அசத்தே: புலன்பொறி சத்தாம்: என்றும சிந்திப்பன். அநந்தரம், இந்திரியம் கூறுவன். மனதைப் பேசுவன். புத்தியே யாவுமெனக் கூசாமலுரைப்பன். பிறகு ஆத்மாவை யுணர்வன். முடிவில் ஆத்மாவாவன் என்புமுதியோர். எனவே, ஒவ்வொரு ரகஸ்யம் ஒவ்வொரு சமயம் உணர்ந்தனர் ருஷிகள். உணர்ந்தவாறே ஓதினர் போலும்! அதுவே வேதம். அப்படியிருக்க வேதமுமறியா தெம்பிரான் ஸ்வரூபம் என்பதன் அர்த்தமென்னே? வேதமுமறியாதென்றதால், வேதம் முற்று முணராதென்பதே யபிப்பிராயமன்று. காணாது காணும். கண்டுங்காணா தென்பதே யுண்மை. பப்பத்தடி தூரத்தில் யாண்டும் நின்றனன் பெரிய பெருமான்: நெருங்க நெருங்கப்பத்தடி நீள்வன். அவன் நீளாதொழிந்த நாளுந்தன்னைக் காணாது காலம் சர்பம் சதபம். வானமும் வையமும் கூடுமோரிடம் கண்டோம் கண்டோம். எத்துணை யெத்துணை யதைநோக்கி நெருங்கிச் செல்லினும் அத்துணை யத்துணை நீண்டதே யகலும். இஃதே எம்பிரான் அநந்த லீலையைக் காட்டும் திருஷ்டாந்தம் என்றே கூறுவம்! இன்னும் விரிக்கிற் பெருகுமாக, விரிவஞ்சி விடுத்தனம்!

X. பிரச்னை:—வேதத்தைப் பணிவுடன் பணிந்து போற்றி, வாழ்வடைந்த ஆகம ஸ்மிருதி, புராணேதிகாசாதி சார்பு நூற்களும், வழிநூற்களும் யாண்டுஞ் சத்தியமாய் வர்த்தித்தல் சாத்தியமோ?

**உத்தரம்**:—சாத்தியமன்று. இவையனைத்தும், முதலந்தமில்லானை யுள்ளபடி யுணராவாதலால் வேதத்தைப்போ லிவை யனாதியன்று. முதலந்த மெய்திய சாமான்ய சாஸ்திரங்க ளிவையென்க. அன்று தோன்றி இன்றுமுடியும், இன்று தோன்றி என்றும் முடியும். அநித்திய பதார்த்தங்கள். திருவருட் பிரசாதமன்று. இளப் பக்குவ நோக்கி எழுந்த பரநூற்களிவைகளே! வேதாவிரோதமாயுள்ள வரையின் மாத்திரமே, வேதமல்லாத விதரபெருநூற்கள் கௌரவமடையும். வேதவிருத்தமா யவை யெங்கெங்கே வியவகரியாநிற்குமோ அங்கங்கே அறிஞர் அவைகளைத் தஞ் சமுகத்தின் கண் தலை தூக்கிபாட அவகாசம் கொடாது ஒதுக்கியாள்வரென்க! அரசனதாணையைச் சிரமேற்கொண் டொழுகியவழி மந்திரி பிரதானியாதியோர் சீரடைந்து, வரம்பிகந்து தத்துப் பித்தாவெனத் தான்றோன்றித் தம்பிரான்களாய் நடனஞ்செய்ய யெத்தனித்தவழி அர

னது ஆஞ்ஞா சக்கரத்தாலடியுண்டு இடியுண்டு பெட்டியிற் பாம்பென வடங்கிக்கிடந்த காசியே சான்றாகுமென்ப

XI. பிரச்னை—வழி நூலாதல், சார்பு நூலாதல், ஒரோவழி வேதத்தை எதிர்த்து வியவகரித்து வரம்பு கடந்தொழுக வெளிப் போந்தமை யாது காரணம் பற்றியோ?

உத்தரம்:—கிளைநூல் வேதத்தில், சாத்தான் பாராமை எதிர்க்கத் துணிந்த தன்மையே யென்னவென்று கூறுப. நூலாசிரியர் அஞ்ஞானங் காரணமாகவும், உரையாசிரியர் கைக்கொண்ட மடமை சேர்ந்த சந்தோஷத்த போலிக்கைச்சாக்ஞக் காரணமாகவும் நேற்றைய சிறு நூலொன்று பிராசீன சந்தான திரத்தைப் பழிக்கத் துணியுமேபோலும்!

“பட்டப் பகற்பொழுதை இருளென்ற மருளர்தம பக்ஷமோ வெனது பக்ஷம்” என்ற பொன்மொழிச் சொல்லை சைமிருகத்தைச் சிரமேற்கொண்டு வாழ்வோமாக. அந்நாமம் மறந்த பதகர் விஷயமாய் யாவர்தாம் என்செய்வாரா? தெய்வந்தான் என்செய்யும். வினைதானென்செய்யும் கிரகங்கள்தாம் என்செய்ய வல்லன. பிரமனென்செய்வான். சிவனென்செய்வன். ஒருவித நோயாற் பிணிக்கப்பட்ட வியாதியஸ்தன் உபயாந்திர பிம்பங்களைக் காணுகிறானென்று ஐரோப்பிய வைத்திய சாஸ்திர பண்டிதர் கூறுவாராக, அவன தந்ஞானமத்தோர் நிரும்வரையில் லெப்படி யொழியுமோ? அந்நோயால் வருந்து மொருவன் காணுங் காட்சிகள் பலவாம். அவனைக் குரங்கொன்று கடித்ததாக. புலியொன் றெதிர்த்ததாம். பாம்பு சீறுமே. இரத்தமொடு குதிரையும் தலைவாசற் போந்தது கிடந்தன. குண்டு நடப்பினை பெரிய பசாசு வழியான வந்த கனது காலைநாடுவா அவனைச் சூலப் படைக்குகிப் பாசத்தாற் பிணித்து மதியைமயக்கி மனதைக்கலக்கி அறிவை யசக்கிப்பேர் அடல் காண்பராம். பூத பைசாசம அவன் குடலைப் பிடுங்குமாம். கொண்டு தெறுக்கால் ஆயிரமாயிரம் அவனை அலைக்கழித்தே கொல்லும். அக்கிலக்ஷம்பத்தில் அவன் கஷ்டமுமபட்டு, உயிர் துறக்க வேலாது நரக வேதனையை மீண்டு இப்பூவுலகத்தே அநுபவிப்பல் கண்டன்றோ? ஒவ்வொரு மனுஷ்யராய்ச் சொல்லொணுத்தன்மை யெய்திராகுமென்பரே மேலோர். ஆயிரநாட்டாகங்கொண்டவொருவன் ஒரு பெருந

தடாகத்திலாழ்த்தப் பட்டனனும். அவனது முகவாய்க்கட்டையளவும் நின்றது தண்ணீர். நீரருந்த வெத்தனித்தான். நீர்தான் அவன் வாய்க்குக் கிட்டாது விலகிற்றென்ப. மீண்டும் மீண்டும் தாகமதிகரித்தது. பண்ணாத பாபம் பண்ணிய பாபிக்கு. ஜலத்தைக் காண்பான் தேடுவான்—உண்பான் செல்வான்—கைக்கெட்டியது மோவாய்க் கெட்டாது நீங்கிற்றாமே, ஏங்குவான்—பெருமூச் செறிவான். வெம்புவான் - விளிப்பான் - முகம் வெளுப்பான் பாபம். அலறுவான்-உலறுவான் - மூர்ச்சித்து வீழ்வான். ஐயோ தெய்வமே! என்னையுடனே கொன்று என்றுன்ப நீக்கலாகாதோ நின்றன் கருணைக்கென்பான் தெய்வத்தின் அபாரகருணையும் ஒளித்ததே பயந்து. பரமலோபி என்ன கேட்டையோ யாவருக்கோ விளைத்தவன்? எந்த வேளையை யேங்கித் துடித்து வோங்காது யாளச்செய்தானோ பாபி. பெண்ணினின்றும் ஆணைப்பிரித்தானோ? தாயினின்றும் பிள்ளையைப் பிரித்தானோ! யாவர் சொத்தை யவரங்கம் பதற, உதரம் பதற, உயிருமே பதறப்பறித்தானோ பாபி? யாவரொருவரைப் பழியஞ்சாமல் கூசாது குற்றம் சுமத்தியழுத்தானோ? புண்பட எவரை வைதானோ புறங்கூறி. எந்த தெய்வத்தை இழித்துப் பழித்தானோ? எந்தப் பெரியோனை நாக்குப்பூக்கப் பேசிக் களித்தானோ? எந்தநற் சாதுவைப் பேராபத்திலைய நெஞ்சறிந்தானறு சொன்றானோ? பிணமொக்கும் பண்பினன். உடல் வதை, உயிர்வதை, சமவதை யாவையும் ஒருங்கே பிடிக்கக் காணக் கிட்டியது. தெய்வமே செய்யும்? தேவரென்செய்வர்? முதியோர் முனிவரும் என் செயக்கூடும். பிராரப்தம் விடாது முக்கண்ணன்றடுப்பினும். ஆயினும் சாது சங்கத்தை யாசிரயிப்பதும், சங்கரன்றுணை யறுதியேங்குவதும், ஒருவாறு வினையும் கடாது கடுமாம். எனவே, சந்மார்க்கம், சநமார்க்கம், சந்மார்க்கம், ஜநமார்க்கம் துந்மார்க்கம், துந்மார்க்கம். போலீஸ் கோர்ட்டேறி அபராதமிறுத்தல் நல்லோர்க் கழகல்: அத்துமீறியும் அநியாயமாயும் சாஸ்திர நிந்தையும், பெரியோர் நிந்தையும், தெய்வநிந்தையும், நல்லோர் நிந்தையும் செய்தலடாது அடாது அடாது.

**XII.** பிரச்நை:—வேதத்தினடியாகப் பிறந்த உண்மை மதங்கள்தாம் யாவை?

உத்தரம் :—துவைத முதல், அத்வைத மீறாப் பேரக்கிடந்த சிறந்த வைதிக மதங்களே யாகுமென்ப.

XIII. பிரஶ்னை :—வேத படிதமாய்ப் பெறப்பட்டுப் பிரகாசிக்கு முண்மைச் சாஸ்திரங்கள் யாவை?

உத்தரம் :—நியாயமுதல உத்தரமீமாஞ்ஸைவரைப் படிக்கப்பெறும ஆறு சத் சாஸ்திரங்களென்க. இவைதமமைமயே நல்லோர் தர்சனங்களென வழைத்தனரென்க. இவை யொன்றையொன்று முரண்பட்டொழியாது ஒன்றற்கொன்று சாதன சாத்ய பாவத்தா லறிஞர் தமமா லறியப்படுமெனக. பதார்த்தங்களைப் பதினாறாகவும், எழாகவும், இரண்டாகவும, பலவாகவும, ஒன்றன்பல்வேறுபட்ட கூறுகளாகவும் பேசிய இவை யாவும்பல படித்தரமான பகருவங்களைக் காட்டா நின்றனவென்க. உத்தர மீமாஞ்ஸைத் துறைப்படியவும், யாவுங் கற்பிதங்களாய் முடிந்தபெற்றியை யவைதாமும காணு தொழிந்தன வென்பர் புண்யமாக்கள். எலலாம புண்ணியத்தளவே எய்துவ போலும்.

XIV. பிரஶ்னை :—மதவாராய்ச்சி செய்து, நவீன மதோத்தாரணம் செய்வான் றுணிந்த வேதசம்பந்திகள் யாவருமே அத்யாவசியமாய்த் தழுவி வாழ்வுடைய வேண்டிய ரதநிய ஞானப் பிரவர்த்தக காரிய உண்மை நூற்கள் யாவை தாமேயோ?

உத்தரம் :—பிரஸ்தாநத்திரயம். எனக் கேட்கப்படுவது. அது சிவோத்கர்ஷ, விஷ்ணூத்கர்ஷ, பிரஹ்மோத்கர்ஷமான விஷயாதீத விஷயங்களையே தாங்கி நின்றுதரவுசெய்யாநின்ற ஒரு வைதிக முக்காலிபோல்வது. ஒரு காலை யொடித்தொழித்தால், ஒன்றைத் தாங்கி நிற்காது. மூன்றனுளொவ்வொன்றும முழுவது மவசியமாம். மூன்றனு ளொன்றை நிராகரித் தொதுக்கிய எவனும வைதிகனாகான். ஈஶ்வரவாக்காம் வேதத்தை நோக்கவும் ஆயிர மாயிர மடங்குப் பிரகாசமுற்றது பிரஸ்தாநத்திரயம். அது வேதசாரம். வேதத்தின முடிவு. வேதஹ்ருதயம். அதைக் கண்டவர் விண்டிலர். விண்டவா கண்டிலர். ஹரனுமதுவே, ஹரியுமதுவே,பிரணவ மதுவே, யாவு மதுவே, அப்பையப்பனை யுடையுமாக்கமதுவே யதுவே! அது பிரம்ஹ ஸூத்திரம், உபநிடதம, பகவதகீதை இவை மூன்றும சேர்ந்து ஒருருவாகி வர்த்தித்த தொன்றும.

XV. ப்ரச்னை:—ப்ரஹ்ம ஸூத்திரம் என்பது யாதோ?

உத்தரம்:—வேதத்தினது முடிவிற் பெறப்பட்ட ஞாநகாண்டத்தினைச் ஸூத்திர ரூபமாக ஸ்ரீ வேதவியாஸ பகவா னருளிச்செய்ததென்க. வேதங்களை யவர் வகுத்துத் தொகுத்தாராதலான் அவர் வியாஸரென்ற காரணத் திருநாமம் பெற்றாரென்ப. பதினெண் புராணங்களையு மவரே பரப்பிரயோஜனமாய் வகுத்தனர்போலும்; சிவபரத்வம் தாற்பர்யமாக அவர் சொன்ன வவஸரத்தில் பிர்மவிஷ்ணு ருத்ராதிகளைக் குறைவாகக் கூறத்துணிந்த நம் சைவர் நன்மையைக் கருதியே! விஷ்ணுபரத்வ புராணங்களில் இதர தெய்வங்களைச் சாமான்யராகக் கூறிப்போந்ததும் ஒரு சாராரினது க்ஷேமத்தை யபேக்ஷித்தே யென்க. வள்ளுவர் ஒவ்வோரறும் போதித்த சமயம் தனித்தனி வவ்வவ்வறமே சிரேஷ்டமாமென்று கூறிய பெற்றியை யுணர்திருலகீர்! ஒவ்வொரு ஸ்தலபுராணமும் முறைமுறையே தத்தம் ஸ்தலமே ஸ்ரீகைலாஸமென்றும், இதர பல ஸ்தலங்கள் அஃதலவெனவும் துணிந்து உபதேசித்த நியதியையு மறிதிர் பண்டித மணிகாள்! ஒரு மஹாவித்வான் கணக்கில ஸ்தலங்கட்குப் பொருளையுத்தேசித்து அவ்வப்போது பற்பல புராணம் பாடிக் கொடுப்பரென்றால், ஸ்ரீ வியாஸபகவான் நல்லெண்ணங்கொண்டு சைவர் வைணவர் இருதிறத்தினர்க்கும் வெவ்வேறு புராணம் அருளிச் செய்தல் அழகு செய்யாதொழியுமோ சொல்லும் அன்பர்காள்! ஒரு சாமாந்ய மனுஷனை உலகம் புகழவேண்டின் இவனுக்குச் சமானன் ஆரெனக் கூறலைக் கேண்மோ! கேண்மோ! உலகவழக்கை யுணர்ந்தும் மஹான் வியாசபகவான் திருவாக்கை யுணராதொழிதல் பாபம் பாபம்! வியாசர் தாமும் வேதத்தைப் பின்பற்றி யாண்டும் உண்மையைக் கூறினரென்ப. அதர்வசிகை: "ப்ரஹ்மவிஷ்ணு ருத்ரேந்திராஸ் ஸம்ப்ரஸூயந்தே நகாரணம காரணந்துத் தியேயச்சம்பு:" என்று கூறியது. "தத்விஷ்ணோ: பரமம்பதம்" என்றது கேநோபநிஷதம். "ராமஏவ பரமாத்மா—ராம ஏவபர: ப்ரஹ்ம" வென்றது ராமதாபிநி.

XVI. ப்ரச்னை:—உபநிடதம் என்பது யாது?

உத்தரம்:—ஸர்வஜ்ஞனது திருவடிப் பெரும்பேற்றை ஜீவர்கட்கு (சிதா பாசர்கட்கு)ப் பிரசாதிக்கத்தக்க தொன்றெனச் சித்தாந்தம் செய்தனர் பண்டிதர். வேதமுடிவில் விளங்குவது, வேதத்தினது

தரகாண்டங்களைப் பூர்வபக்ஷப் படுத்துவது. வேதமெட்டாத தலைவனை எட்டாதெட்டுவது. அறம் ஒழியச்செய்து அறம் பிரகாசிக்கச் செய்வது: மாயரூப வியவஹார வெள்ளத்திற் போந்த தொன்றெனினும் பாரமார்த்தத்தை யடைவான் பொருளாதனமாய் முடிவதால் சத்தென்று சானுக்களமைப்பின்றது. கனாக்கிறந்த பொய் பொய்ம்மையே தருமேனும், பொய்க்கூட்டத்திற் பிறவா நிற்கு பொய்யொன்று மெய்யைக் காட்டும் பெற்றிய தென்பர் மேலோர். ஸ்வப்பனத்தில் புலி யடித்ததாகக் கண்ட ஒருவன் ஜாக்ர மடைந்து பயந்தீர்ந்த காதையை யுலகம் அறிந்திருக்குவதாக புலியடித்தது பொய்யேனும், அதனால் ஜாக்ரமாகிய மெய்ம்மையடைந்ததும் பொய்யோ கூறீர். பெண்டு பிள்ளை பண்ட பதார்த்தங்களாம் பொய் பொய்ம்மையன்றி மெய்ம்மையைத் தராவேனும், சற்குரு உபாசனையாம் வியவகாரப் பொய் யொன்று பாரமார்த்திக மெய்ம்மையடையச் செய்யு மென்பதும் மெய் மெய்!

XVII. பிரச்னை:—பகவத்கீதை யென்பது யாது?

உத்தரம்:—கண்ணன் பெருமான் தர்மக்ஷேத்ர, குருக்ஷேத்ர யுத்தக்களத்தில் அர்ஜுனனுக் குபதேசித்த ஞான நூலாகும். காவியங்கள் யாவற்றிலும் நாமறியோம் ஞானம் போதிப்பது கண்டோமே! அவனவன் கடமையைச் செய்த லத்யாவசியம். பதிகளத்தில் ஒப்பாரி யுண்டோ? க்ஷத்திரியன் தன் கடமை செய்யானாயின், மானிடப்பதராய் முடிவானென்று தர்மத்தை யுபதேசித்தான் மைவண்ணன் அண்ணல், கர்மமென்றும், அகர்மமென்றும் விளக்கிக் காட்டினான் ரணக்களந்தன்னில். பகவான் நாமமும் முன்னமே மாண்டே யொழிந்தாராக மற்றுமுள்ளார் பிறர் ஒருமிப்பதுமப்பாரன்ற சத்தியத்தைப் போதனை செய்தார். கர்மம் சொன்னார் யோகஞ்சொன்னார் ஞானம் பக்தியுடனே சொன்னார். யாவரு மவர் உள்ளொடு புறங்கீழ் மேலா யுயிர்தொறு மொளிக்கும் கள்வக் கண்ணனை.

கீதை— நூற்றுக் கணக்கான பல்வேறுபட்ட பாஷைகளிற் பல் வேறுபட்ட காலங்களில் மொழிபெயர்க்கப் பெற்றது. அதைக் கற்பிதமென்பாருங்கூட அதைத் தெரிந்து மயங்கியும் மகிழ்வர். வெறுத்தும் விரும்புவர். எதிர்த்தும் ஒடுங்குவர். தூஷித்தும் போற்றுவர் வாயாலிழித்துப் பழித்தும், தப்பாதுள்ளத்திற் பூட்டுவர். அன்று

டொழிவர். அந்த அத்வைதம், இந்த அத்வைதம், உந்த அத்வைதம் பேசிக்கிடப்பர். உண்மை யத்வைதம் பேசாடக்குமென்ற துணர்ந்திலர் போலும்,

19. பிரஸ்நை:— வைதிகப் பெரியோர் யாவரேயோ ?

**உத்தரம்**:—திரிமத பாஷ்யம் செய்து மேன்மையுற்றோர்! ஸ்ரீநீலகண்ட சிவாசார்ய சுவாமிகள் (இவர்கள் செய்த பாஷ்யம் சைவ விசிஷ்டாத்வைதம் எனப் பேர்பெறும். ஸ்ரீமத்ராமாநுஜ பாஷ்யத்திற் போந்துள்ள ஹரிநாமங்கட்குப் பதிலாக, சிவநாமங்களைப்படித்தால் உபய பாஷ்யங்கட்கும் வித்யாசம் காண்பதரிதே என்றார் மேலோர்) ஸ்ரீமத் அப்பைய தீக்ஷித சுவாமிகள், சைவசமயகுரவர் நால்வர், இதர வைதிக சாம்பவர் பலர். ஸ்ரீபாகவத சிரோமணிகள் முதலியோர் தொகை கணக்கிட லருமை யருமை.

20. பிரஸ்நை:—கிறிஸ்து மதஸ்தர், பௌத்த மதஸ்தர், ஜைந மதஸ்தர், மகம்மதிய மதஸ்தர், முதலிய பரமத மதஸ்தர் விஷயமாய் வைதிக உத்தம ராதுக்கள் கொண்டு வாகநியாநின்ற அபிப்பிராயம் யாதோ?

**உத்தரம்**:—நல்லாசிரியரை யடுத்து நற்கலை பயின்று பரந்த கொள்கையாளராய்த் திகழும் அறிவுடையோராம் வேதசம்பந்திகட்கு யாவரும் யாவும் யாண்டும், சிவமாய் விளங்குதலுண்மை: பரம மெய்ஞ்ஞானிகள் கருதுவ யாவும் நாரணன் வடிவமே. பிரபத்தியிற் படிந்த புண்ணியப்புலவர் காண்பன யாவுமே கண்ணன் கோலம். கிறிஸ்து ஆலயமும் கிருஷ்ணன் கோயில். மகமதியரமையும் பள்ளிவாசலும் சிவாகாரமாகும் கண்டீர் மலிர்! புத்தமுனி வாக்கும் நற்புத்தியைப் புகட்டும் க்ஷணிக விஞ்ஞானவாதம் யோகவாதமேயாம். அருகக் கடவுளும் முக்கணன் கோலமே! தந்தெய்வ மெனதெய்வ மென்றே பிதற்றார் நல்லோர், நாவலர்.

21. பிரஸ்நை — சிற்றபோஜனை எப்போதுபாரித்தல் வேண்டும்? எப்போது பூசித்தல் வேண்டும்? எது கொண்டு தொழுதல் வேண்டும்?

**உத்தரம்**. — "ஸர்வத்ர ஸர்வகாலேஷு ஸாதவேத் பிரமஹ ஸாதநம்"
"பூஜையேத் பரமாத்மாநம் ஸதா நிர்மலமாநஸஹ"

பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்குவனென்றே கூறினன் கீதாசார்யன்.

22. பிரஶ்னை :—சிந்மய சிவனை நமஸ்கரிப்பான் பிரயோசனப் படும் மந்திரம் யாதோ ?

உத்தரம்:—" ஓம் நமஸ்தேபரம், பிரஹ்ம நமஸ்தே பரமாத்மனே
நிர்க்குணாய நமஸ்துப்யம், சத்ரூபாய நமோநம :"

23. பிரஶ்னை :—பிரஹ்ம கவசம்யாதோ ?

உத்தரம்:—" பரமாத்மா சிர:பாது, ஹ்ருதயம் பரமேஶ்வர:
கண்டம்பாது ஜகத்பாதா, வதநம்சர்வ திருக்விபு:
கரௌமேபாது விஶ்வாத்மா, பாதௌ ரக்ஷதுசிந்மய:
சர்வாங்கம சர்வதாபாது: பரப்பிரஹ்ம ஸநாதநம்:"

24. பிரஶ்னை :—பரப்பிரம்ம மஹா மந்திரம்யாதோ ?
" ஓம் சத்சித் ஏகம்பிரஹ்மா"

25. பிரஶ்னை :—ஞானிக்கும் பக்தனுக்கும் வித்யாசம் யாதோ?

உத்தரம் :—உண்டு: ஞானியைப் பெரியோர்மர்க்கட நியாயத்தா லறிவர். பக்தனை மார்ஜால நியாயத்தா லறிவர்.

26. பிரஶ்னை :—பிரபத்தி எங்கே ஸ்பஷ்டமாய்க் கேட்கப் படுகிறது ?

உத்தரம் :—கீதை: 18-ம் அத்தியாயத்தில்

" சர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம்சரணம் விரஜ
அஹம் த்வாம்ஸர்வ பாபேப்யோமோக்ஷ யிஷ்யாமி மாசுச:"

27. பிரஶ்னை :—யோகியும் ஞானியும் வேவ்வேறு பதார்த்த மாவரோ ?

உத்தரம் :—" யோகியர்க்கே ஞானமொழுங்காம் பராபரமே"

28. பிரஶ்னை :—சர்வேஶ்வரனை அடைதற் பொருட்டு முக்ய பெருஞ் சாதனமாய் நின்றதெதுவோ ?

உத்தரம்:—"அன்பர் பணிசெய்ய என்னையாளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலைதானே வந்தெய்தும் பராபரமே"

' சத்சங்கத்வே நிர்த்சங்கத்வம், நிர்த்சங்கத்வே நிர்மோஹத்வம்
நிர்மோஹத்வே நிஸ்சலதத்வம், நிஸ்சலதத்வே ஜீவன்முக்தி:"

பண்டைநாட்களில் இந்திரபுரமென்ற நாட்டையாண்ட அரய னொருவன் புத்திரப்பே றின்மையாற் பன்னெடுநாள் நைந்துநொந்துக் கிடந்து இறுதியில் ஒரு தவமுனியி னருட்டிறம் கூட்ட வொரு பெண் மகவடைந்தனன். புண்ணிய சமூகமே போந்ததோ பெண்ணு யென் றே யாவரும் போற்ற விளங்கினள் சிந்தாமணியும்:நாமகள், பூமகள், மலைமகள் மூவரும் உலகங்காண்பான் ஒருடம்பெய்தி வந்த பிம்ப மோ என்பார் கண்டோர். தெய்வப்பெண்கள் கொட்டமடக்கவே வந்தவளென்பார் மற்றுஞ் சிலர் தாம். அற்றன்று காண்டிர்! மா யையை வெல்வான் வந்த மாயையா மென்பா சிற்சிலர்! பிதாமகன் ருனும் மயங்கினனென்றால் நகைகட்டழகியைக் கண்டார் யாரே காண் பார் தம்மையும்? ஆயிரங் கண்ணனும், கண்ணிலேனென்றான். ஆதி சேடனும் நாவிலையென்றான்! இந்திராணி தேவியும், ஏக்கங்கொண் டாள். அகலிகை முதலியோர் ஹா! ஹா! வென்றனர். சாவித்திரி நல்லாள் நல்வரவு சொல்வாள்! இன்னண மொளிர்வாள் பைங்கொடி யாளும் முறையே பேதைப் பருவம், பெதும்பைப் பருவங்கடந்து நெருங்கினள் மங்கைப்பருவம். பார்த்தார்கண்ணைப் பறிக்கும் பே ரழகியைச் சாது வொருவர்க்குத் தத்தம்செய்து ராஜ்யம் தந்து, வீட் டை யடைவான் காட்டையடைய வுன்னி அரயன் உசாவினன் மந்திரியை. மந்திரி பிரதானியோா பரசறைவித்தனர் முரசறைவித் தனர். பப்பத்தாட்களே ஏவினரெங்கும். அரசன் பெண்ணையும் அர சன் பொன்னையும் போற்றிக்கொள்ளும் சாதுவைக் காணுரெங்கும்.

சாப்பாட்டு ராமன் சுகஜீவி யொருவன் கேட்டனன் விளம்பரம். போட்டனன் வேடம். வாளைவாளையா யிழுத்தனன் பூதியை. லலாட முழுமையும் நீறுபூத்தனன், கண்மணித் தாழ்வடம்பூண்டனன் உடம் பெலாம். பஞ்சாக்ஷரீ மந்திரம் முகத்திற் கொண்டனன். இருந்த னன் ஒரு சார் சைவப் பழமென. அரசன் காண்பான் சென்றான். உலகம் தொடர்ந்தது. கொடியெனப் படர்ந்தனள் ராஜபுத்ரி யும் அண்ணல் மார்பினில். வையகம் நெருங்கவும் கண்ணை மூடினன் போலிச் சாது. ஈது நினைப்பான் இத்தறுவாயில். ஏட! மூர்க்க! பொய்வேஷத்தினுக்கே இத்துணைச் செல்வம் அமையுமானல், மெய்

யேவிளங்கிலுல் எத்துணைச் செல்வமோ யான் பெறக்கிடப்பது? சீச்சீ! வேண்டேன்! வேண்டேன்! இம்மலவாழ்வு! மெய்யே விளங்குக! பொய்யே யொழிக! பொய்யே மெய்யிலொடுங்கி நீ கிடக்க! பொய்யும் மெய்யுமாம் ஜடம் நானன்று! என்றே யுன்னியிருந்தனன் சமாதி. மறந்தனன் யாவும். கூப்பாடிட்டார் பீரங்கி வெடித்தார் நின்றவரெல்லாம். சாதுவானுன் திரும்பான் திரும்பான். எனவே, சாதுவின் வேஷமே பெருமுக்தி தந்தால் சாதுக்கள் சங்கம் தராதன வெவையோ?

29. பிரஶ்னை:—பரமேஶ்வரன் திருவுருக்கொண்டு அன்பர்க்குப் பிரசாதித்தா னென்றல் ஈம்பவமாங் கொல்?

உத்தரம்;—என்னணம் கட்புலனுகா நீராவி குளிர்காற்றின் சேர்க்கையாற் ஜலமாகி அந்த ஜலமும் பனிக்கட்டியா யிறுகா நின்றதோ அன்னணம் எம்பெருமான் அன்பர்களது அன்புகாரணமாக அருவம் உருவமா மாறித் திருவுருக்கொண்டு போந்தன னென்க.

30. பிரஶ்னை:—ஆண்டான் அடிமை சம்பந்தங்கள் எத்தகையனவோ?

உத்தரம்:—பாகவதப்பெரியா பகவானுக் கடிமைகள்: பகவானே பாகவதர்க் கடிமைத்திறம் செய்தே சந்தோஷிப்பனுமை.

"யே, யதா, மாம், பிரபத்யந்தே
தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்"

என்ற கம்பீரத் திருவாக்கே சான்றாகு மென்ப.

மகதியாழைக் கையிலேந்திய நாரதவிருடி யொருநாள் வைகுண்டம் சென்றனர் மெய்வாழ்வைத் தரிசிக்க. என்றும் காணுக்காட்சி கண்டார். பணிந்து போற்றினுர் விஷ்ணுமூர்த்தியை. ஐயன் பசும்பொன்னுற் செய்த மாடந்தன்னில் சிந்தாமணி விளக்கேற்றிப் பூசித்தனன் பல ஞானவிக்ரஹங்களை யத்தருணம். அவன் பூசிக்கப்பெற்றப் பெருந் தெய்வங்கள் கண் வளர்ந்தனராக,லக்ஷ்மீசமேதன் அன்புடன் பணிவுடன் பரிந்து காத்துக்கிடந்தனன் தெய்வமஞ்சத்தை! பக்தியோகம் பேசிய விருடியும் மெய்ம்மறந்து நின்றனர் மெய்புணராது!

பக்தவத்ஸல! நினது லீலையென்னே என்னே! இந்த வித்தை பழமைதானே? நவீனமேயோ? ஒப்புயர்வில்லா தோங்கிய வீச

னே? நின்னையாண்டாராரோ அருள்வீரென்றனர். என்னையாளுடை யீர்! இன்னணம் என்னையாடல் காண்பிரேல் என்னணம் எளியேன் நின்னை யண்டுகோ! உன்னுமாறறியேன்! உணருமாறறியேன்! பன்னுமா றறியேன்! பாடுமாறறியேன்! நினதருள்பூத்து எனது சங்கை யொழித்துக் காத்தல் நினது கடனே! என்றே யரற்றினர், சச்சிதாநந்த ஹரிபு மறைவான்! அன்பகேட்டி! எந்தெய்வங்கள் பருங்கு நீ யடையாதொழிக! அறிதுயில்கொண்டார்! அறிவாய் நின்றார்! பேச்சையடக்குக! நந்தெய்வங்கள் சமாதி கூடின. நின்னன்புங் கரைந்து அறிவாயோங்குக வென்றனர் லோக சம்ரக்ஷகன்: ஞானக் கண்கொடு கண்டார் நாரதர்! கண்டார் கண்டார் கண்ணன் கூற்றினை "ஹே! பரேஶ! பிரபோ! நீவிர் கீதையிற் கட்டளையிட்டவாறே காட்டினீரிங்கே! நீவிரடியார்க் கடிய ராவ துண்மையே. அடியார் நும்மை பஜித்தவாறே, நீரும் அடியரைப் பஜிப்பீர்போலும். அம்மவோ! யாரைக்கண்டனரோ மஹாமுனிசிரேஷ்டர் தாம்?

"பிரஹ்லாத நாரத பராசர புண்டரீக வியாசாம்
பரீக்ஷ சுக சௌநக பீஷ்மதால் பியாம்
ருக்மாங்கதார்ஜ்ஜுந வசிஷ்ட விபீஷணாதீன்
புண்யாநிமாந் பரமபாகவதாந் ஸ்மராமி."

31. **பிரஶ்நை** :—பகவாநதருவத் திருமேனி, எதிர் மறைத் தர்மத்தை யடைதல் கூடுமோ ?

**உத்தரம்** :—என் அடையாதோ? அருவமும் உருவமும், ஸ்தூல புத்திகட்கே எதிர்மறைப் பொருள்களாகா நின்றன. அருவத்தின் கண்ணே உருவமும் அடங்கி நின்ற அரிய உண்மையை யுணர்ந்தடங்க எவ்வளவோ மூளை பலம் வேண்டுமே யன்றோ? அருவமாகிய காற்று, பொருளோ அலது சூன்யமாமோ? அருவமாகிய ஆகாயபூதம் உருவப் பூதங்களாய்ப் பஞ்சீகரித்துப் போந்ததைக் காண்டிர்.

ஆகாசமே எல்லாமாயல்லவுமாய்ப்போந்ததையு மறிதிர்! காரிய பரிணாம பூதங்கள் பொய்ப்பட்டொழியவும் காரணவாகாச மொன்றே சத்தியமா யாண்டும் நின்றதை யுணர்திர் ?

ஜீவனருவமேனும், அவன் சூன்யமா யொழிந்தானோசொலீர். அந்நமய, பிராணமய, மனோமய, விஞ்ஞானமய, ஆநந்தமய கோசங்

களும், ஸ்தூலமொழிந்த சூக்ஷ்ம, காரண தேஹங்களும் முற்றும் சூன் யந்தாமோ? அருவமாகிய கடவுளை உருவங்கள் யாவுமே எனவேத மோதிய துணர்வீர். அருவமாகிய தொன்று எதிர் மறையிலக்கணப் பொருளொன்றை யியக்குமா றெங்ஙனே? கண்ணுக்கு விஷயமாகா தனயாவும் உருவ மொழிந்தே கிடந்தனவோ? மற்று, உண்மை யோதுதும் கேட்டிருலகீர்! அருவம் ஓர் அவசரம், உருவம் ஓர் அவசரம், அருவமே உருவம், உருவமே அருவம். உருவாருவம் என்ற தொன்றில்லை. எதிர் மறைத்தர்மம் தங்காதோ ரிடத்தில் அருவத்துக்கப்பால், உருவத்துக்கப்பால், அப்பாலுக் கப்பால், இப் பாலுக் கிப்பால் என்றனன் யாண்டும் பெரிய பெருமான். அவனை யறிந்தே மென்பார் அறியாரறிபார்: அவனை யறியே மென்பார் அறி வாரறிவார்!

"அவிஜாதம் விஜாநதாம் விஞ்ஞாதம் அவிஜாநதாம்" சிற்றம்பலமே திருவரங்க மென்ப: தில்லைதில்லை யென்றாலில்லையே தொல்லை வல்லை வல்லை யென்றேவல்வினை யொழியும். அம்பலங்கண்டார் அம்பல மானார்; சிற்சபையடைந்தார் சிநா னென்னார்: அன்மைப் பொருளையும், இன்மைப்பொருளையும், கொட்டிக்கொட் டிப்பொய்யை வழங்கார். உண்மைப்பொருளே பொருளே வொழிய மற்றோர்பொருளை வேண் டோ மென்பார்:ஹரனேஹரியாம் ஹரியேயாவுமாம் என்றே கழறுவர் எம்பெருமக்கள் "ஏகனனேகன் இறைவனடி வாழ்க" இன்ன தன் மைய னென்றறியாச் சிவனை பக்திவலையாற் பிடிப்போமென்பார் சித்தமுஞ் செல்லாச் சேட்சியன்றன்னை அன்பெனும் தாம்பாற்பிணைப் போ மென்பார்: பாரெலா மாக்கு நமபரா பிரகிருதியை சேய்போ லிருந்தே அணைவலென்பார். பிராணனை யடக்கிச் சித்தமொடுக்கிப் பிராணபந்துவைக் கூடாதுகூடி, சுகாதீதம்பூப்பர் சமாதி மஞ்சத்தில்: அன்னார் பெருமையவனே அறிவான் அவனுமே யறியான் அவ ளோ அறிவாள்.

32. பிரஶ்நை:—ஆணவமொழிந்து நாமவனாத லென்றோ?

உத்தரம்:—தண்டகாரண்யந் தன்னில் வாழ்ந்த வாண்சிங்க மொன்று நரனம்புபட்டு உயிர்துறந் தொழிந்தது. அதனைப் போ ற்றி வாழ்வடைந்து கிடந்த பெண் ணரிதானும் பூரணகர்ப்பம் அந் தத் தருணம். தலைவனைக் காணாது கதறிற்று சிம்ஹம்; பலநாட் கழிந்

தன. பசிநோயுற்றுப்பரதவித்ததாம். இயற்கைத்தாமசம் தூண்டவே, இடம்விட்டுப் பெயர்ந்து காட்டிற் பாய்ந்தது. செம்மறியாட்டு மந்தையிற் போந்தது. போந்த வேகங் காரணமாக நேர்ந்த வதிர்ச்சியால் உயிர்க்கமலம் மலர்ந்ததாக வீரிட்டு விழுந்துப் பிராணனை யொழித்தது. வயிறுபிளந்தே குட்டியுமுயிர்த்ததாம்!உயிர்த்தகுட்டிக்கும் ஆட்டுக் குட்டிக்கும் வித்யாசம் காண்பது கூடாமை போலும்; அவ்வாட்டு மந்தையிற் குட்டியிழந்த பெட்டையாடொன்று இதைத் தனதாகவே கருதி பாலூட்டி வந்ததாம். புல்லைப்பூண்டைத் தின்றதே யிஃதும். வளர்ச்சி குன்றி, தளர்ச்சியெய்தி, மிருகேந்திரன் செல்வமும் வாடிக்கிடந்ததாம்.இங்ஙனம் சிலநாட்களி லொருநாள் சிங்கக்குட்டி நீரையருந்தவோ ராற்றையடைந்தது. வலிவின்மையினால் மொத்தென விழுந்தது நதிதீரத்தே. அப்போழ்தத்து இரைதேடிவந்த ஆண்சிம்ஹமொன்று கண்டது சிம்மக்குட்டியின் பரிதாபநிலையை. பறந்தனபறந்தன 'மேமே' ஜாதி! பல்காவததூரம். மிருகராஜனும் இனத்தை யணுகிறது. உற்றுற்றுப் பார்த்தது. நெட்டுயிர்ப் படைந்தது. வேர்த்தது வெளுத்தது! குழந்தாயிதென்னே நின்னவதி கூறுக வென்றதே! குட்டி பல்லைக்காட்டிப் பதறிப் பதறி மே! மே! என்றது! வெருண்டது வெருண்டது மற்றது தானே! சீச்சீ! சீச்சீ! நின்ஜாதி எங்கே! உதரமெங்கே! ஆண்மை எங்கே! குலப்பதமே சொல்! மே! மே! என்றால் முடிப்பேனின்னுயிர்! எழுக! எழுக! வருக! வருக! என்றே கூறி குதித்தது யாற்றில்; தொடர்ந்தது குட்டியும். நற்காலம் தொடர்தலால், கண்டனை யிளையோய்! எனது பிரதிபிம்பம்! நினதுங்கூடவே! நீ ஆடுமல்ல, மாடுமேயல்ல, ஆண்சிங்கமானாய் என்றே அண்ட கடாகமுங் கலங்கும்படி செய்தது கர்ச்சனை! செய்ததே குட்டியும்! பறந்தன விரண்டும், விழுந்தன மந்தையில், ஆட்டையு மாட்டையும் பஸ்மம் செய்தன. புலியும், பூனையும், நரியும், நாயும், யானையும் ஆவும் ஏங்கின வேங்கின! பெருமித நடையும் தளர்ந்தன தளர்ந்தன. வெருவினவோடின, உதறின, பதறின, அற்ப ஜந்துக்கள், கர்ஜ்ஜனை முழங்கவே!

33. பிரச்னை :—ஒன்றான பிரஹ்ம லக்ஷணங் கூறுக.

உத்தரம்:—" அத்துவிதம் வாசாமகோசர மநாதீத மசலமூலந்
தத்துவமப் ரமேயஞ் சர்வசமஞ் சச்சிதானந்தஞ் சாந்தம்

சுத்தமவிகார மநுபவந் துரியரூப சுபமபிரகாச [ன்றே."
நித்திய நிர்க்குண மநந்த நிரதிசயம பிரமமெனநின்ற தொ

4. ஞாநியின் சித்தாநதம என்ன?
" ஆறுநெறிக்கு மவிரோத போதமே
தேறுமெய்ஞ்ஞானி யென்று நதீ(ப)
சித்தாநத பாகும தாநதீபற"

35. பிரஶ்நை:—மாயை எப்போநகலுமோ?

உத்தரம்:—மாயை யெனக் கண்டபோ தோடட மெடுக்கு மென்க. திருடன் கண்டு பிடிக்கப்படடபோ தோட்ட மெடுத்ததே திர்ஷ்டாந்தம் போலும்.

36. பிரஶ்நை:—மாயை சத்தியமோ? அசத்தியமோ?

உத்தரம்:—சத்தியமுமல்ல, அசததியமுமலல, அநிர்வச நீயமாகும். சிவனைப்போல் யாண்டும சத்தியமனறு. மலடி மகனைப போன்ற பொய்யுமனறு கானற் ஜலம்போன்ற காட்சியுடையதேன்க.

37. பிரஶ்நை:—அத்வைகம எப்படிப் பிரயோ ஜனத்தைத் தரும்.

உத்தரம்:—பாவனை மாத்திரததானே, பிரயோசனஞ் செய்யும். அநுஷ்டாநத்தி லத்வைதம் காட்டப் போகாது, ஸோகம், சிவோகம் சிவ: கேவலோகம் எனறே ஆத்மலாபங கருதி கூறுதல நேரிதே யாயினும், வியவகாரத்தில் தாயுட, பெண்டும, தனது மல்லதூஉம் அத்வைதப் பொருளென மருளுதல் மருளே! பெப்வாதம தொடுத் துவாய்மதம் பொழிநது அழியப்படாது! ஸ்வபநாவஸ்தையினும் தாயைப் பெண்டாய்க் கொண்டோ ருண்டோ? சுழுத்திதன்னில் தாயையும் பெண்டையும, கண்டாருண்டோ? சுழுத்தியிலொன்றை யும் காணார்தாமும சாக்கிர சுழுத்தியிலெதையோ காண்பார்? பெண் டைத் தாயாய்க் கண்டவருண்டு. எங்கள் தெய்வம இராம கிருஷ் ணன் பெருஞ் சான்றுவார். தாயைப் பெண்டாய் மயங்கான் முத் தன்.

38. பிரஶ்நை:—அத்வைதம் யாண்டுச் சிறக்கும்? உத்தரம் பாரமார்த்திக வுவஸ்தையி லத்வைத மத்யாவசியம், வியவஹார நிலையி

லத்வைதம் கூறற்க, "நபரஸ்வமபஹரேத்" என்றார் மேலோர். பரதார விச்சை யடாதடாது. பரஸ்திரீகமனம் வைதிக மன்றே. நானற்ற போதம அத்வைத மென்ப. நான் ஒன்று முளைப்ப, முளைத்தன நீ, அவன், அவள், அது, அது: இவை யனைத்துமே மூர்த்திகரம் பெற நானே காரணம். என்று தொழிந் தாற்றனுது விளங்கும். ஏகம் சத்தென வோதின யாவும். அனேகம் அசத்தென வறிவோர் வைதிகர். பசுவும பாசமும் பதியை விட்டில்லை, பசுவேறுனல் அதன் கணக்கென்னவோ? பூரணத்திற் கன்யதாபாசம் வேறுமோ? அகண்டாகார வறிவே சத்யம். அஃதேநித்யம். ஆநந்தமுமாம.

39. பிரஶ்னை:—ஜீவன் முத்தனுக்கேனும், தாயும் பெண்சாதியும், தமக்கையும் வேசியும், தனதுபுத்ரியும், அந்நியன் செல்வியும் தன்பொருட் கூட்டமும், பிறரதாராஜ்ஜிதமும், யாவரும், யாவும், ஒன்றென முடிந்தனவன்றோ?

**உத்தரம்**:—பரமசந்தோஷம்! ஜீவனிறந்த ஜீவன் முத்தன் அழலிடைப்பட்டுக் கருகிய நாண்போல் நின்றனனுக:—

பந்தமொழிந்தான் நாமரூப மிருப்பினும்: தாயுமில்லை, தந்தையுமில்லை. தாரமறியான் தமரையறியான், மகவுங்காணுன். மகிழ்வுங் கொள்ளான்; தாசியைக் கோரான், வேசியைப்பாரான்; தனதுணரான் அல்லவை யோரான்: யாவரும் யாவும் பரசிவ வடிவம்: பஞ்சபூதங்கள் வொட்டாதவனை: பிரம்ஹாஸ்திரம், நாரணஸ்திரம் பாசுபதாஸ்திரம் முதலிய யாவும் அவன் றிருவடிதன்னில் சரணமடையும்: தன்னையே காண்பான், தானுய் நிற்பான்.—அவன் தாயைப் பெண்டென மயங்குவதெங்கே. சுகிர்தம், துஷ்கிருதம், இரண்டையுங் கடந்தே நின்ற நின்மலயோகி அதர்மகிருத்தியம் செய்வதுமுண்டோ?

இச்சையநிச்சை இரண்டுமெரித்தான்
பெண்ணைப் பெண்டாய் மருளுவத சம்பவம்
வேண்டுதல் வேண்டாமை அறவேது வம்சம்செய்த
ஞான சூரியன். வேசியைக்கண்டே பல்லைத்திறப்பனே?

அற்ப தாசியின் குலுக்கும் மினுக்கும் அசைக்கா தவனதசையா வுள்ளம். காமனைச்சுட்ட கண்ணுதல் ஞானி. அவன்றன் சந்நிதி

யடையுமோ? காமம், வெகுளி, மயக்கமென்ற குரங்குக் கூட்டம், ஆணவம், கன்மம், மாயையென்ற மும்மலங்களுமே அதிகப்பிரசங்கம் செய்தலொண்ணுமே. எல்லாமுடையான் எதையோ விரும்புவான்? சராசரம்யாவு மவனது விபூதியே யென்றால் அவன் பிக்ஷையேற்றுப் பிழைப்பது முண்டோ? இரம்பை, மேனகையாதியர் அவன் சமாதி கெடுப்பரோ? பாம்பும புலியும அவன் பணிவிடைசெய்யும். கள்வனும், வெறியனும், குடியனும், கொலைஞனும் கண்டாராலுற் கற்பூரமாவர். பரமஹம்ஸன் அஸ்தம்பட்டார் அந்தக்கணமே கண்டார் கைலை. சத்தியலோகம், வைகுண்டம், ஸ்வர்க்கம், காணலாம் யோகியின் பாதம் பட்டால்; பரமார்த்தமுணர்ந்த பெரியோர் பார்வைபட்டால் பார்வதிபாகன் பார்ப்பதுமுண்டே! ஈண்டையிருந்தே மேலேழுலோகம், கீழேழுலோகம் காண்பதும் சத்தியம் அசத்தியமன்று; சிவஞானச் செல்வன் சீறினனுல், பூண்டற்றொழியும் பாபிகள்குலமும்; மீளான் துரோகி பதினுயிரங் கற்பம். ஒரு சிவயோகியே நம்மைக் கடைக் கணித்தால் அன்றே அட்டமாசித்தி யடையப் பெறுவோம். நிஷ்காம்யகர்ம யோகியைப்பார்த்தார் பாரார் மீண்டும் பாழுலகத்தை. மூன்றுலோகமும் மும்மூர்த்திகளும் அவன்றன் திருவடி சிரமேற் கொள்வர்.

40. **பிரஶ்னை**:—பரசிவனுக்குக் ப்ரக்கப் படிக்கப்படும் எண் பெருங் குணங்களு மவனுக் குண்டுகொல்?

**உத்தரம்**:—திரிசங்குஸ்வர்க்கம் சிருட்டிசெய்த விஸ்வாமித்ரன் ஓர்சார் சான்று. ஒரு தண்டத்தால் ஒரு பதினுயிரம் திவ்யாஸ்திரங் களைத் தியாஜ்யமாக்கிய வசிஷ்டன் ஞானி. பத்ரகிரிக்குப் பரலோ கந்தந்த பட்டினத்தடிகள் பெரிய கரியே! பார்த்தனுக்குக் கைலைகாட் டிய கண்ணன் கண்மணி! சுகப்பிரம்மத்தின் சங்கையொழித்த சநகன் யோகி. கொக்கென்றெண்ணினீரோ கொங்கணரே யென்றே அறைந்த அம்மை மெய்ஞ்ஞானி. அற்புதம் அளவில ஆங்காங்கு காட்டிய புண்ணியவடிவினர் எண்ணுளடங்கார் பேதையுலகீர்!

41. **பிரஶ்னை**:—பொய்யிற் பொங்கிவழியும் பேதைமாக்கள் மெய்யையாண்டடைவரோ!

**உத்தரம்**:—இன்றே அடைவராசையொழித்தால். "நிராசையின் றேற் றெய்வமுண்டோ"

42. **ப்ரஶ்நை** :—எங்ஙனம் நிராசை யெய்துவர் பாபிகள்?

**உத்தரம்** :—பிறந்து பிறந்து, இறந்து இறந்து, அவதிவாய்ப் பட்டுக் கைகாலொடிந்து, தலையறுப்புண்டு, புலிவாய்ப்பட்டு, நரி பற்பட்டு, அக்நிகுண்டத்து வீழ்த்தப்பட்டு, குட்டங்கண்டு, குடர் வெளிப்பட்டு, நாற்றமெடுத்து, நாப்புழுத்தள்ளி, நரகற்கக்கி, நமனுதைபெற்று, சீச்சீ! சீச்சீ! யென்று பலரும் இகழ்ந்துகூறக் கேட்டுச் சகித்து, செய்தபாவம் வருந்தியொழித்து, முடிவிற் பரனடி பேணுவர்போலும் முழுமக்களாவார்

43. **ப்ரஶ்நை** :—பரபத்தியையே பணியாப்பூண்ட பரமமெய்ஞ் ஞானியைத்தொடாதோ தீவினை?

**உத்தரம்** :—நெருங்காது விடாது ப்ராரத்தகர்மம்; உருட்டிய வுருளை வோடியே தீரும்: நெருங்கிற்றேனும் வலிகுன்றிக் கிடக்கும்.

வச்ராயுதத்தை என்செயும் எஃகு? மலைபோற் போந்தன பனி போலொழியும். ஆகாமிய கர்மம் அவனோ அறியான்: எல்லாம் சிவார்ப்பணம் என்பானாதலால். சஞ்சிதப் பெருமலை பற்றியெரியும் அவன் திருஷ்டி படவே. எனவே, மூவகை வினையும் முனியாது ஞானியை. பில்லி சூனியம், சாத்தான் பிடாரி பறக்கும பன்னிரு காவததூரம். ஒரு ஞானி யுண்ட வொருபிடிசாதம் ஈரேழுலகமு முண்டுகளிக்கும். அந்த ஞானியை ஏசிய துஷ்டன் அன்றே மடிவான் குலாந்தகனெனவே!

44. **ப்ரஶ்நை** :—ஜீவன் முத்தன் தனது வியவஹாரத்தை யிச்சையின்றியே முடிப்பானென்ப தென்னணம் சாத்தியமாகுமேயோ?

**உத்தரம்** :—முத்தன் பெரிய பத்தனாதலால், யாவும் சிவன்றன சொத்துக்களாகப் பாவிப்பா னென்றதுண்மை யுண்மையே! ஒரு பிரபு வீட்டின் செவிலித்தா யொருத்தி பிரபு குழந்தைகளைத் தன் குழந்தைகளாகக் கொண்டு என்னணம் கொஞ்சிக் குலாவி நிற்பளோ அன்னணமே, முத்தனும் பத்தனும் தனதன சிறார்களை பரசிவ பிரபுவினது மக்களாக் கருதியே கொஞ்சுவர் ரஞ்சிதமாக. செவிலியும் யாதோர் காரணம் பற்றி பிரபு வீட்டினின்றும் நீக்கப்பட்டால், தானன்புடன் வளர்த்த குழவிகள் தம்மை விட்டுப் பிரிந்தும் துக்

கத்திலாழாள். அதுபோல், உண்மை ஞானியும், உண்மைப் பத்தனும், தத்தம் மக்களை சின்றன மக்களாய்க் கண்டே களிப்பர்: பிராரப்தம் காரணமாக அன்னாரை விட்டு நீங்கப்பெறினும் அறிவையிழந்து அழாரென் றறிக! என் சொத்தென்ற வஞ்ஞானமொன்றே சகல துக்கங்கட்கும் காரணமாகும்.

" மநயேவ மநுஷ்யாணும காரணம் பந்தமோக்ஷயோ:"

45. பிரஸ்நை:—பகவான் அடியார்களை ஏனோ சோதித்தாராங்காங்கு?

உத்தரம்:—சோதிப்பில்லாது சோதிக் கவர்ந்த சோதியான் தன் பொருட்டேனும், அடியர் பொருட்டேனும் சோதனை செய்தான் செய்வானென்ற தசங்கதம. தன் பொருட்டென்னில் அவன் பூரணனுதலும் சர்வஞ்ஞ னென்னலும் கூடா கூடா. அடியார் யோக்கியதையை யறிதற் பொருட்டெனினும், அதுவும் அடாதே அவன் பேரருட்கு. மற்று, பரப் பிரயோசனம் கருதியே யென்க.

அஞ்ஞாந வுலகம், துக்க மொழிந்து, சுகந்தனை யெய்தவே, ஆண்டான் அடிமையை யாடல் கண்டதும் காண்பதூஉம். என் பெண்டேசத்யம், பிள்ளையே சத்யம, பண்டம் சத்யம, பதார்த்தம் சத்யம், வேறே சத்யம் காணேன் காணேன். இருப்பின் ஏனோ வெளிவரக் காணேன். இருப்பதாக மனப்பாலருந்தல் வீணர் செய்கையே யென்று கத்திக் கதறிக் கழறிக்கிடந்த முழுமகன், பொய்மை யொழித்து மெய்மைக் காட்டவே, பரமன் பற்பல காலாந்தரங்களிற் றிருவுருக் கொண்டு மீண்டைப் போந்து அடிமைகள் துவாரபொய்யுலகினுக்கு மெய்ஞ்ஞானம் போதித்தனன் போலும் என்ப மேதாவியர்.

" இமைப் பொழுது முபகார மல்லால் வேறொன்
றியக்கா நிர்க்குணக்கடலா யிருந்த வொன்றே"

என்ற சத்யத்தை யுய்த்துணர் திருலகீர்!

46. பிரஸ்நை:— " நினைந்துருகுமடி யாரைநையவைத்தா" ரென்ற தேனோ?

உத்தரம்:—" தொண்டர் குடிகெடுக்கத் துவஜங்கட்டிக்கொண்ட மோநகுரு" வென்ற அருட் பிரகாசவள்ளற் பெருமானது மெய்க் கூற்றே சமாதானமாகு மென்ப.

பசும்பொன்னை யுடையா னொருவன் அதையுடனே விலையாக்குமாறு பற்பலரிடம் கொண்டு சென்றனனாக:—அவசர மில்லாத பலரும் வேண்டேமென்று கூறலுற்றதூஉம், பொன் வியாபாரம் செய்தேஜீவிப்பா னொருவணிகன் ஐய! அதைக்கொணரும் பார்ப்போம்; அதை யுரைப்பல், வெட்டிப்பார்த்தே பணந்தருவல்! தமது சம்மதம் யாதோவென வோதியவுண்மை நேரிதாமன்றே! சர்வேஶ்வரன் நல்லோரை யாட் கொள்வா னெழுந்தருளி வந்து தமதரிய லீலை நடாத்தலு மஃதே யென்க! இரும்பைப்பிடித்த துருவொழிந்த மாத்திரத்தானே காந்தமதைத் தன்னிட மிழுத்தல் கண் கூடன்றே! தன்னூர் விட்டே வேறூர் செல்வான் றுணிந்த வொருவனைக் கடன்காரர் வழிமறித்துக் கடனை யுடனே யிறுப்பான் கேட்பதும் சம்பவமேயன்றோ? சகமார்க்கத்திற் போந்து கிடந்த சாது சகமார்க்கமொழித்துச் சன்மார்க்கம் புக வெத்தனித்தானாக, பழைய வினைக் கூட்டம் கும்புகும்பாய் வந்தே வழிமறித்தலைக் காணீர் நேசர்காள்!

பல ஜநநங்களிற் றுய்க்கக்கிடந்த தீவினைத் தொகுதியை யொரே ஜந்மத்தில் கூட்டுவன் சங்கரன் என்றுங்கூறுப சாது ஜனங்கள். சஞ்சிதப் பெருமலை பகுதிபகுதியாய் நெருங்கிவந்தே விடை பெற்றொழியுமாம்.

"வினைதா னொழிந்தாற் றினைப்போ தளவும் நில்லாது தேகம்"
என்றே அறைந்தார் பட்டினத்தடிகளும்.

நிகழும் தேக போகங்கட்குக் காரணமான பிராரப்தம் தேகம் விழும்போது தானே விழுமாம். ஆயினும் முத்தன் தேகத்தில் வாழ்ந்தும், அதைவிட்டே வாழ்தல் சத்யமேயாக பிராரப்த கர்மம் துய்ப்பதும் தேகமே யாதலால் பிராரப்தந்தானும் அவனை யசக்கியதில்லை. நானற்றபோதம் நாளுமடைந்தான் நானென்று கர்மம் செய்தானில்லை யாதலால், கிரியமாணம் கேட்கப்படாது.

47. பிரஶ்னை:—ஞானசூர்யர் தாமும் தத்தமை யிழித்தும் பழித்தும் கூறியதேனோ பற்பல வவசரந்தன்னில்?

உத்தரம்:—அஷ்டோத்தரசத வுபநிடத கோவையை யஷ்டாதசப்பாசுரத்தடக்கிய நந் தாயுமானப்பண்டிதர் பெருமான் "ஆணிலே பெண்ணிலே யென்போல வொருபேதை யகிலமிசை யுண்டுகொல்" என்றே புலம்பிய புலம்பலை யுணரார் முழுமக்கள் யாண்டும். மக்கட்

சரீரம் போர்த்த விலங்கும் பறவையும், பற்பல கோடி யுள்ளனவாத லால் சுவாமிகள் புருஷார்த்தம் விளக்கிய புண்ணியர் தம்மையே ஆணெனப் பெண்ணெனப் பேசினரென்க. ஆயினும் ஞாநவாரிதியா வார் வெவ்வேற வசரந்தன்னில் பொய்யினேன், புலையினேன், கொலை யினேன், எனவே கூசாது கூறியதுண்மையே யன்றோ கூறுகவுலகே! சத்தியஸ்வரூபி தாயுமானாரும் யாது பிரயோசனங் கருதிச் சொல்வர் அசத்யந்தன்னை ? சூரியன் பூமியைச் சுற்றிக்கிடத்தலும், ஆதிசேட னே யதை யாண்டுஞ் சுமந்ததூஉம், பாற்கடலொன்று பரந்து கிடப் பதூஉம், இளமதிச் செஞ்சடைப் பரமன்றானும் பரதகண்டத்தின் வடபால் வாழ்வதூஉம், அற்புதம் பல காட்டிய பத்தர் பொந்தியோ டே கைலைபுக்கதூஉம், எருமையேறி ஏமன் வருவதும், இன்னோ ரன்ன வெண்ணத் தொலையா பற்பல காட்சிகள் சம்பவமானால் தாயு மானார் வாக்கும் பொய்யாம். மற்று : அவர் யாண்டும் உண்மையை யோதினரென்றே துணிந்து கூறுதும். பொய்யினேன் என்றார். பொய்யை மொழிந்தனரோ ? கொலையினேன் என்றார். கொலையும் செய்தனரோ? வெறியனேன் என்றார். அஞ்ஞான வெறியோ? வெகு ளியேன் என்றார். வெகுளியைக் கண்டனரோ? கொடியனேன் என் றார். கொடுமை நினைத்தனரோ ? இல்லையில்லை யொருபோது மில்லை. தாயுமானார் முத்தனுதலாற் றிரிகால வுணர்ச்சியும், நிகழ்கால வுணர்ச்சி யாயவர்க்கு நிகழ்ந்தது போலும்: வேதம் கசக்கும் வாக்யாமிர் தத்தை யூட்டியவள்ளல், தாம் பூர்வஜந்மாந்தரங்களிலடைந்து கிடந்த வாசனைகளை ஞானக்கண்கொண்டு கண்டாராக அன்ன பழக்கங்களை தொந்து வெளியிட்டனரென்ப. ஞாநதேகம் துவாரா வெய்திய சாக்ஷாத்காராநுபவப் பெருஞ் செல்வத்தையும் ஆங்காங்குப் பிரகா சப்படுத்தி யுள்ளதையும் காண்டிர் ! அவர் தமது ஸ்வாநுபூதியைப் பேசியபோது மற்றொன்று விரிக்கப் புகுந்தாரில்லை யன்றே !

48. பிரஞ்னை :—நாம் காணப்பெற்ற பெரிய ரொருவர் உண் மைச் சாதுவே என்று கோடல் யாண்டை நேரிதாம் ?

உத்தரம் :—நாமிதுகாறு மறியாத குதூஹலம் அவர் சமூகந் தன்னில் உண்டாமானல்: பிரியாது பிரிந்த காதலன்றன்னை நினையாத சமயம் சந்தித்தகாதலி யெத்துணைச் சிறப்பினதாய வாநந்தம் பூப்ப ளோ வத்துணைச் சுகமும் ஒருயோகி சந்நிதி நாம் எய்தியகாலை யடைவதூஉம் சத்யம். சந்தேகமில்லை.

ஒன்று கூறுதும் திருஷ்டாந்தமாகக் கேட்டிருலகீர் ! அன்னத்தைப் பழித்தும், சொன்னத்தை வென்றும, கிள்ளைநாணவும், கரும்பு கசக்கவும், மானே நெருங்கவும், விளங்கிய யுவதியையின்றே தானும் கண்டானேனும், கண்ட வக்கணமே, கண்டனைய மொழியாடனக்குக் கண்ணையுங் கண்ணையும் (மனத்தை)க் காணிக்கையாகக் கருத்துறச் செலுத்தியே வுயிரற்ற வுடலெனக் காதலனொருவன் உழன்றதை யுழல்வதைக் காணிரோ வுலகீர் ! கண்மணியானையாள் கண்வளர் க்ஷேத்ரமே சாலோக்யமன்றோ ! காதற் கிழத்தியின் சாமீப்யந்தானே சாமீப்யமன்றே ! விற்றவிழ வாணிமிர மெய்யணிகள் மின்ன, சிற்றிடைநுடங்க வொளிர் சீரடி பெயர்த்து, கவினெலாந் தழைத்தொளிர்கட்டழகியுமே கடைக்கணித்தா ளெனில், சாரூப்யமன்றே: சம்சயமின்றே: கண்டோ, சீநியோ, சர்க்கரைப்பாகோ வமிழ்துதானோ வென்றே மயங்கக் குதலை மொழிவாள் முத்தேவிளங்கப் புன்னகை பூத்ததே வைகுண்டம் கைலை. காமர் பூங்கொம்பே! கண்ணினுண் மணியே என்ற காதலற்கு வருளேதழைத்து உள் அன்பாய்க் கனைந்து யாழைப்பழித்த குயிற்குரலாளும் அஸ்தஸ்பர்ச வாநந்தம் தந்து அறிவாநந்தவுண்மை மயமாக்கிய வத்புத வவசரம் சாயுஜ்ஜியம் தன்னை மெய்யே யடைந்ததூஉம் பொய்யோ வுலகே !

அன்பே வுருவெனப் போந்த ஞானியின் சமுகம் சேர்ந்தால் ஏனோவன்பும் எய்தா தொழிவோம் ?

49. பிரஸ்நை :—குருவிலானொருவன் கண்டவானந்தம் எத்துணையோக்யதை யுடைத்தோ கூறுக.

“ குருவிலான் பெற்றஞானம் குமரியைக் குமரி கூடி
மருவிய வின்பமொக்கும் மண்ணிடை நம்போல்வந்த
குருவினாற் பெற்றஞானம் குமரியைக் குமரன்கூடி
மருவிய வின்பமொக்கு மென்பர்நன் மதியுளாரே.”

சற்குரு சந்நிதானத்தில் தன்னை யறியாதெழுந்த வடக்கம் உண்டாகும் சற்சீடனுக்கு :—

“மன்னர்முன் காலன்முன்னும் மகிழ்ச்சியைப் பிரக்கவந்த
தன்னிகர் நோயின்முன்னும் தானடங்கிடுவார்போல
மின்னமர் கைலைநீத்துமெய்யுடையார் போல்வந்த
கொன்னமர் குரவன்முன் அடங்குவன் குலமாணுக்கன்”

சற்குருவைக் கண்ட மாத்திரத்தானே சற்சீடனிடம் தன்னையறியா தெழத்தக்க வைபங்கள் இவை போலும் :—

"ஆசானைக் காண்டோறும் அன்புருகும் கைகுவியும்
மாசாரு முடம்புமயிர்க்குச் செரியும்
பேசாத வானந்த முள்ளூறும்—அக்கணமே
பாசங்கள் தாணந்து முத்திதரும்".

50. ஆசானும் அடிமையும் எத்தகையவான வகப்புறச் சம்பந்தங்களுடையரோ கூறுக.

**உத்தரம்** :—நாயகன், நாயகி சம்பந்தமாட, ஏகாந்தத்தில் இரண்டற்றிருப்பர்; ஆசானுங்கிலை அடிமையுமில்லை. அறிவே விளங்கும், அறிவாய் நிற்பர், அன்பாய் மாறிப் பாசம் பழுத்த ஸ்திரீபுமான்றும் தூலதேகம் ஒன்றிரண்டென்ற வற்பஞானம் உணராதொழிந்தார். அன்பும் அறிவும் வொன்றுமிடத்தே உண்மை வேறொன்று முளைத்தலுமரிதே. தம்மை யொழித்தே தம்மை யெய்துவர் தம் பதிகள் தாம் தாரணிதன்னில்.

அடிமையும் ஆசானும், வியவஹார வுலகம காணும்போது ஸ்திரீ புருஷரென்ன வொழுகுவர் போலும்? சீடன்பத்நி—சற்குரு பர்த்தா, பத்நியைப்போற்றியே வாழ்வர் பர்த்தா, பர்த்தா தெய்வமெனக் கொண்டாள் பத்நியும.

51. பிரஃனை :—உண்மைச் சாதுவுக்கும் போலிச் சாதுவுக்கும் வித்யாச மென்னனம் தோன்றும்.

**உத்தரம்** :—மக்கள் பலரை யிழுக்கும் சக்தியையுடையரே சாது ஜனங்கள். போலிப் பலகால் பெருங்குரற்பாய்ச்சியே கதறிக்கிடப்பினும் மதியார் மதியார் மானிடதேகிகள். எத்தனை யெத்தனைபோலிச் சிவனடியார்கள் கண்ட கண்டவிடத்திற் கூப்பாடிடுகிறார், சைவம் பரமென முழக்கம் செய்கிறார். சிவனே சிறந்த தெய்வ மென்பார். உபாஸ்யர் உபாஸகர்லக்ஷணங் கூறுவார். பரத்துவ மோராது பரத்வம் நாட்டுவார். எத்தனை எத்தனை வைணவமணிகள் ஆதிமூலம் ஹரியே யென்பர். ஹரன் முதலியோராய பசுக்கள் அவதி மூலமே யென்றேயறைவர். சோதிமூலம் தம்முளம் நின்றதைக் காணதொழிந்தார் கண்ணிலாப்பேதைகள். எத்தனை யெத்தனை பேதைமாக்கள்

சிவனுக்காகவும் சைவம் தழைக்கவும், உயிரையே விடுவதாகக் கூறுவர். எத்தனை யெத்தனை பாகவதர்கள் கண்ணன் தம் சொந்த சொத்தென்றே நிறுவதற்கு எல்லாம் தத்தம் செய்யச் சித்தமென்பார்கள்.

எந்த வறிவுடையுலகம் பொருளெனமதித்தது இப்பேதையுலகத்தை: எங்குருநாதன் விவேகாநந்த பிரபுவுமே வுலகமுழுவதும் சென்றாங்காங்கு ஐரோப்பிய, அமெரிக்க, ஜெர்மானிய, ஜபாநிய மஹாகலைஞாந சூரியர் தம்மை அற்புதமற்புதம் என்றே கூறுவான் போதித்துத்திரும்பிய சிறப்பொன்றன்றோ சிறப்பென நின்றது. அன்று வந்த ஸ்ரீ சங்கரர் தாமோ இன்று வந்தார் எம்பெருமானுகை. மற்று, இச்சென்னை நகர் ஞானம்வீசி வாழ்வான் விளங்கிய நங்குருமணி ஸ்ரீமத் சாந்தாநந்த மூர்த்தந்தன்னைத் தரிசித்த பிறகும் போலிப் பேதைமாக்கள் பாழ்ங்குரற் கூற்றைக் கேட்கவுங் காது கொடுப்பரோ நல்லோர். மஹான் ஸ்ரீநிவாசலு நாயுடு பாதம் விழுந்தவர் கணக்கில புண்ணியர். விழுந்துகிடந்தார் உயர்குலவறிஞர் பல்லோர். விழுந்தே கிடந்தவர் பிரபு ராஜம் ஐயர். மஹான் சிங்காரவேலு முதலியார், அஞ்ஞாந நோயை யறவேவாட்டும் புன்னகை தவழ்ந்த திருமுகப்புண்ணியர் சைதந்யத்தைத் தம்மிடம் கண்டவர் கொண்டவர் டாக்டர் நஞ்சுண்டராவ் என்ற பெரியர். இராமனே மீண்டுங் கலியுகங்காணப்போந்தனனென்றே கண்டோர் சங்கித்துக்கிடக்க நின்ற பெருமான் ஆரியமணியும், அநார்யப்பேதைப் பாவிசர் கூற்றை அதம் செயும் நாவினர், நாவலர் பெருமான், முக்கணன் கண்ணை முற்றத்திற்கட்டி யடக்கிக் காவல் வைத்த நங்கள் கண்மணியனையார் ஆங்கில துரைத்தனத்து உந்நதபதவிவாழ் பிரபுக்கள் மதிப்பைப் பெற்றவர், பெருந்தகையண்ணல், ரிவினியு சர்வே அசிஸ்டெண்டு சூபெரின்டண்டு இராமசாமிப் பெயரியவண்ணல்: இம்மட்டோ இத்தகைப் பெரியோர் நூற்றுக்கணக்காய் அடிமை செய்தனர் எங்கள் சாந்தாநந்த குருமணியார்க்கு அத்தகைப் பெரியோரன்றோ ஞாநிகள் யோகிகள் பக்தர்கள் கூறீர்.

வேடதாரிகள் விதவைகள் எனவே, மோதிவிழுந்து புரண்டு கிடந்து அவதியுமுற்றே அலறி யுலறினும் யாவர் மதிப்பார் முழு மக்களாவார் ஈனச்செயல்களை ?

52. **பிரஶ்நை:**—மஹா ஞானிகளாவார் என்னனம் ஆஸ்திக ஞானத்தை ஆஸ்திகப் போலிகட்கும நாஸ்திகமணிகட்கும் நிரூபணம் செய்யாநிற்பர்?

**உத்தரம்:**—உள்ளபடியே உண்மையை நாம உற்று நோக்குமிடத்து ஒன்று நமதகக் கண்ணுக்கு விஷயமாகா நிற்கின்றது. பிரபஞ்சத்தில் ஆஸ்திக ஞானமுடையராய் வர்த்திக்கும் பல கோடானு கோடிப்பிரஜைகளில் அங்கங்கே பதின்மர் உண்மையாஸ்திகர் நேரிடுவதருமை யருமை. மற்று; பெரும்பாலார் பணத்தையே போற்றி வாழும் பண்பினராயினும் என்பதிற நடையொன்றில்லை. கௌதம புத்தரையே தெய்வமாகக் கொண்டு தெய்வம் வேறில்லையென்ற புத்தர்களுள் இன்று கௌதமோத்தமரை யொத்து அன்பு மருளும் பூத்துத் தழைத்து வாழும் பெற்றிபா இருபதின்மரேனும் ஓரிடத்திற் காணக் கிடைப்பரோ வறியேம். யாமே ஞானிகள்; கிறிஸ்தவரல்லராகும் நீவிர் யாவரும் அஞ்ஞானிகளே என்று வாய்ப்பறை யடித்தே வெளிவரும் பல்லாயிரக் கிறிஸ்துவப் பிரஜைகளில் எத்தனைபேரோ தேவகுமாரன் கிறிஸ்துவைப் போல உலகத்தை ரக்ஷிக்கத் தத்தம் உயிரைத் தத்தம் செய்யத் தயாராயிருப்பவர்?

ஹிந்துஜன சமூகந்தன்னில் பூதிபூசும் பெற்றியர் பலருள் பதினாயிரத்தி லொருவரேனுப பூதியின் ரஹஸ்யம் உணர்ந்தாரில்லை. அடுத்தவீட்டு நமசிவாயன் றவிர, வேறே நமசிவாய னுண்டெனக் கனவினுமுணராதொழிந்தனர் பேதைமாக்கள். கொட்டைகட்டிய பூனையொன்று பறக்குமாறுல் ஸ்வர்க்கம் நோக்கி, யாமும் கொட்டை கட்டிக்கொண்டே பறப்பம கைலைநோக்கி யென்றே கதறுவர். உருத்திராக்ஷ கண்டிகை தன்னை யணியப்பெற்றார் முத்துக் கண்டிகை, மரகதக் கண்டிகை, பசும்பொற் கண்டிகை, முழுமணிக் கண்டிகை யணிந்தே மயக்கும் தாசிவேசிச் சிறுமியர் தம்மைச சீச்சீயென்றே சீறுவர் பாம்பென: ஒற்றியூர்த் தியாகன் சேவைகாணப் புஷ்பாவதியையும், ரூபாவதியையும், லீலாவதியையும, இந்திராணியையும் இழுத்துச்செல்லார்; தலைவினைக் கதறிக் கிடந்து கூழுங்கழவும் விட்டேதிரியார் நாரிகள் பின்னே சாது சைவர்கள்! எங்கள் நடனமும், எங்கள் லீலையும் அவன்றனது நடனமும் லீலையுங் காரணமாகவே எழுந்தன வென்றறையும் பேதைப்பெண்களின் கண் வலைப்பட்டுக் கண் கலங்கித்

கண்ணொழிந்தும் கருத்தழிந்தும், கர்மம் செய்து திரிவரோ உத்தம சைவரும் பிறரும்? வைணவரிலர் பாகவதர் பலர், [திருமண் தரித்த] யாமே அடைவம் பரமபதமென்பர். திருமண் தரியா தொழிந்த நீவிர் யாவரும் பாஷண்டராவீர் என்றே குழறி வழிவா கண்ணன் கோயிலில்; நுங்கள் சிவனும் எங்கண்ணனிடம் பிக்ஷையேற்றோ பிழைப்பனென்பர். "நாரணன்றானே நான்முகனைப் படைத்தான். நான்முகன்றானே சங்கரனைப் படைத்தான்" என்றே கோஷ்டம் விளைத்துச் சந்தோஷிப்பர். போலிச் சைவர் போலி வைணவர் இருதிறத்தினரும் சமயம் வாய்த்தபோதெல்லாம் புத்தரை நிந்தித்துப் புத்தை யடைவர்; கிறிஸ்துவைத் துன்மார்க்கத் தனமாய் ஏசிப்பேசுவர்; மகம்மது நபியைக் குறைபல கூறுவர்; பிரம சமாஜத்துப் பெரிய மஹான்களை வெறுத்தும் வைவர். ஹரஹரவென்பர், ஹரிஹரியென்பர், ஹரனையுங் காணார், ஹரியையும் பாரார். இன்னோரன்ன போலி மாக்கட்கு மனைவியே ஹரனும்; மக்களே ஹரனும்; பணமே ஹரியாம். ஆயிரம் பதினாயிரம், லக்ஷாதி லக்ஷம் கோடானு கோடியாய் அளவு சங்கியை யின்றி உலகாயதராய்த் திரியும் பாமரர் தாமோ ஆஸ்திகரரவார். இவர்கள் பொய்யா பொய்யரே போலிகளாவர். மற்று; நாஸ்திகரென்பார பலசாராருண்டாம். அன்னார், கடவுளுண்டெனில் ஏனோ நாமவரை யடையாதொழிந்தோம். அவரெம்மையேனோ வலிந்தாட்கொள்ளாது கிடந்தார். ஜடமொன்றே சத்யம். சித்தென்ப தொன்றுண்டெனல் அசங்கதம். ஜடம் காரணம் : சித் காரியம், என்ற பலவித நோக்கங்கொண்டே வாதிப்பர் பலர். அன்றியும் ஒரு பெருஞ்சாரார் ஒரு தலையாகவே சிற்றறிவெட்டாப் பேரறிவுண்டு, யாண்டுமஃதை யாம் அறியாதொழிந்தோம். ஒழிவோம். ஏனோ அந்த வீண் சங்கடம் எமக்கு என்றும் முழக்கம் செய்யாநிற்பரே! உண்மையாஸ்திகன் தன்மை யாதெனில் கூறுதும் கேட்டீர், லக்ஷக்கணக்கான தங்க நாணயம் நிறையப்பெற்ற இருப்புப்பெட்டி சேமிக்கப்பட்ட உள்ளைக் கன்னம் வைத்து அடைந்த கள்வன் பெட்டியை யுடைத்தலிலெண்ணம் எல்லாம் செலுத்திக் கிடந்தவன் என்னணம் வேறொன்றைக் கருதா தொழிந்தனன் கொல்லோ அன்னணம் தானே பகவானைக் கண்டே நெருங்கியபத்தர் பெருமான் அவன் றிருவடிப் பேற்றுக்கன்னியதா வொன்றைக் காணான் காணான் யாண்டுங்காணான். பகற்காலத்தில் பற்பல யாறுகள், மலைகள், சோலை

கள், சாலைகள் முதலிய பதார்த்த தெரிசனை செய்து களித்தவர் தாமும் சூர்யாஸ்தமான பின்னர் அண்டாண்ட தெரிசனை செய்தே இறும்பூ தெய்திய வுண்மையை அறிவுடை யுலகம் அறியாதொழிந்த தேயோ? முறை பிறழாமல் யாவையுமியக்க வோரறிவும் வேண்டிலமோ என்றே அறைவர் விவேகிகள். உலகம் உண்டோ இல்லையோ நாம் விசாரிக்க வேண்டாம்: நாம் சத்தியமாயுள்ளதை நம்பாதொழிந்தமோ அறிவுடை யுலகீர்! நேற்றில்லாமல் இன்று முளைத்ததோமில்லை. இன்றுமுளைத்த யாம் நாளையில்லாம லொழிந்ததுமில்லை. நாம் நாமுண்டென நம்பிய நபர்கள் தத்தமையறியவும், ஒருவனை யொருவ ரிருப்பதாயறியவும், நடுவில் முளைத்த வுலகமறியவும், ஒன்றிருந்தவிடம் இல்லாத மற்றொன்றை, அஃதும், இஃதும் உண்டென வறியவும், யாவற்றோடும் சம்பந்தப்பட்டே, யாவுமாகியுமல்லவாகியே யாவையு மியக்கியாடல்காணுறாஉம் ஒன்றும் தானே வேண்டப்படலும் நேரிதாமன்றே. ஆகாசபூதம் எல்லாமாகியும் வேறாகி நின்றும் எல்லாம் வாழ்தற்கவகாசம் கொடுத்தும் எல்லாம் வாழ்ந்த காலத்தும், ஒழிந்தகாலத்தும், தானென்றே விசாரணையில் சத்தென நின்றதன்மைபோல் சிதாகாசஸ்வரூபமாயுள்ள சிற்சபேசன் நின்றனன்போலும், யாவுமாயல்லவாய். யாரோவறிவார் அவனதிரேக மாயையை? அவனருளொன்று கூட்டினால் மாத்திரம் அறியும் உலகம் அறிவாய்நின்று: அறிவான தெய்வத்தை யறிவாலடைந்து அறிவாய் விளங்குவார் அறிவுடை யன்பர். ஆதலால் உண்மை நாஸ்திகர் ஞானவிசாரணை மேற்கொண் டொழுகுவாராதலான் அன்புருவாமெமது அண்ணல் வாழ்ந்த வீட்டையடுத்து நிற்பரோ? வேடதாரிகள் ஆஸ்திகராகார் நாஸ்திகராவர். பூதி பூசினும், திருமண் தருப்பினும் கண்ணன் றன்னையும், முக்கணப்பனையும் காண்டலருமை யருமை யருமை உள்ளன்பிலாத மானிடப்பதர்கள்.



53. பிரஶ்நை :—சிந்முத்திராங்குசக் கோலம் காட்டிய சங்கரன் சொல்லாமற்சொன்ன திறத்தை நினையாமல் நினைத்துப் பவத் தொடக்கை யொழித்த நால்வா அடைந்த பெரியபேறறை நாமுணர்த லொண்ணுமோ ?

உத்தரம் :—நாமற்றசமயம் நாமுமே புணாதல சம்பவமன்றே!

ஸ்ரீ தக்ஷிணாமூாத்தி அருட்கோலங்கொண்டு போந்த காட்சியைக்கண்ட பொழுதத்தே சனகாதியோா கண்டாா தத்துவம். சிந்முத்திரையைக் கண்டனராகக கணடனா கணடனா மகாவாக்யார்த்தம் : யோக முத்திரையைப் பாாததவழி யோகம அடைந்தார். போகமடைந்தாா. இசசிறுவாழ்ககையின் நஶ்வரபோகம ன்று. அப்பெருவாழ்வின சிவபோகமாகும. அதுவேபோகம : இது

வோ போகம்? அன்பு முத்திரையை யடைந்த மாத்திரத்தானே ஆசை யொழித்து அன்பாய் நின்றனர். ஆணவம், கன்மம், மாயை யங்கில்லை. அறியாமை யென்னும் வித்திட்டுவளர்த்த ஆசையென்ற விருக்ஷாகாரமும், அவ்விருக்ஷமேயீன்றதீங்கனிமயக்கமும் அறவே துவம்சம் செய்தனர் இருடிகள் நால்வரும், அருள் முத்திரையும் கோசரமாகவே, மருளையொழித்து அருளை எய்தினர் சிவயோகம் பயில்வார். ஞான முத்திரையை ஞேயமாய்க் காண்டலின் அஞ்ஞானமுமே சுஞ்ஞானத்தில் ஒடுங்கி நிறகக் கண்டனர் கண்ணால். காலதேச வர்த்தமானங்கள் தம்மொடும் அத்வைதம்பெற்ற மனத்தை யொடுக்கி யடக்கினர் எம்பெருமக்கள். காலமும் தேசமும் வர்த்தமானமுமே மனதின் ஸ்ருஷ்டிகொ லென்றே யுணர்ந்தனர். பிரபஞ்ச பதார்த்தங்கள் ஒவ்வொன்றுந் தானே காலத்தானும், தேசத்தானும் பிணிக்கப்பட்டே யுள்ளதையோர்ந்தனர். காலத்தை யபேக்ஷியாத பொருளொன்றுண்டோ?தேசத்தைத்தானும் ஆச்ரயியா தொழிந்த வஸ்துவொன்றும் கிடந்ததுண்டோ? வர்த்தமானம் என்றதொன்றும் காலம் தேசம் இரண்டையுந் தழுவி நின்றதைக் கண்டாரறிவால். மனோபாவமே இவைகள் யாவும் மனதின் பரிணாமம் என்றுங் கூறுப. மனதை யொடுக்கினால் காலமேங்கே தேசமேங்கே? காரண காரிய பாவமுமெங்கே? மனமே அசத் என்பதும் உண்மையேயானால், காலம் சத்தோ, தேசம் சத்தோ?—காலத்தைவிட்டும், தேசத்தைப் பிரிந்தும் ஒரு சிறு க்ஷணமும் நில்லாத் திரணமும் யாண்டுஞ் சத்தாய் நிகழ்தல் யாண்டையதோ? எனவே, பழைய சம்பந்தம் ஒழித்த ஜீவன், சிவத்தோடத்வைதம் ஆனானென்ப. அத்வைதமானான் அபேதமானான். அவனே, இவனே, இவனுமவனே, யாரோவறிவார் உண்மையைத் தானும்: யாவையுஞ் சூனியம் சத்தேதிராகலின், சத்தே அறியாது அசத்திலது, அறியாது.

54. பிரச்னை:—அம்பாசமேதன் ஆதி சங்கரரா யவதாரம் செய்த வவசரம் அருளிய உண்மை யாதோ கூறுக?

உத்தரம்:—வேதாந்தத்தின் வியன்பொருள் தெரிப்பத தேசமெங்குந்திகர னென்னப் போந்த மூர்த்தம் நங்குரு மூர்த்தம்: புன்சிறுமதஸ்தரை யல்க்கணுற்று அவதியிலாழ்த்தி யாடல்கண்ட க்ஷணிக விஞ்ஞான புத்தர்வாதத்தைத தொலைத்தது சங்கரத்வைதவாதம்

சங்கரரன்றி யேனை மதஸ்தர் க்ஷணிகவாதத்தை யசைப்பது மருமை என்றுணரப்பெற்ற பராபரன்தாமே யம்மையை யதிட்டித்து அருள் மேனிதாங்கிச் சங்கரராகப் போந்தனன் என்ப. புவிமகள் இழைத்த பெருந்தவம் போலும். பரதவர்ஷமும் புண்ணிய பூமியாயிற்று. நாமகள் வளர்த்த தவமும் பலனை யடைந்தது. பூமகள் பொங்கும் பொங்காயிற்றே. மலைமகட் செல்வியும் சிற்சக்தி ஸ்வரூபமா யெம் பெருமானுடன் அத்வைதம் பெற்றுப் போந்தனள் பூமியில் அவரது திருவுருவாக. தேவர் முனிவர் மூவர் யாவரும் ஆர்த்தனர் ஆர்த்தனர் அத்புதமென்றனர். பிரபஞ்சம் மலர்ந்தது. சராசரம் மகிழ்ந்தன. அசேதனரும் சேதனராயினர். சேதநா சேதநம் ஓங்காரம் செய்தது : பஜகோவிந்தம் முழக்கம பெற்றது. ஸோகம், சிவோஹம், சிவ: கேவலோஹம் எனறே ஓதினர் ரங்கத் தொனியை சாதுக்களாவார்.

ஈரெட்டாண்டினெல்லா மோதி யெல்லா முணர்ந்து எல்லாம் விளக்கிய எங்கள் பெருமான் சொல்லாது விட்டதொன் றில்லையென்ப. வைதிகப் பெரியோர் சாஸ்திரம் வேறு, மதமும் வேறு, தத்துவஞான மென்பதும் வேறே என்ற கூற்றை யாண்டனரில்லை. சேதனசேதந பிரபஞ்சப் பதார்த்தங்கள் தம்மை அறிவு கொடாய்ந்து அறிவிற் சேர்த்து முறைபிறழாமல் கிரமமாயமைத்து வேண்டும போது அதனதன் க்ஷேத்ரமுணர்ந்தே எடுத்துவழங்கி யுபகரித்தலே பூதபௌதிக சாஸ்திர வுணர்ச்சி யாகுமென்பர் மேதாவியர். சேதனந் தன்னை யாண்டு மறிவித்தும், அசேதனந் தன்னை யாண்டு மசைவித்தும் இயக்கம் செய்து ஆடல் காணுறாஉம் பேரறி வொன்று அநந்த கலியாண குணங்கடமமோடும் சாஹித்யம் பெற்றுக்கிடந்ததே என்றதை நிரூபணம் செய்தலே மதத்தின் றன்மை.

"கோஹம் கதமிதம் ஜாதம கோவெய் கர்த்தா அஸ்யவித்யதே
உபாதாநம் கிமஸ்தீஹ விசாரஸ் ஸோய மீத்ருச:"

"நாஹம் பூதகணோ தேஹோ நாஹம சாக்ஷகணஸ்தத :
ஏதத் விலக்ஷணః கஸ்சித் விசாரஸ் ஸோய மீத்ருச:"

யானோசேதநன்? யான்யாரோ வறியேன்? இந்தப் பிரபஞ்சம் அவ்வப் போதும் மாறிமாறியே கிடப்பதூஉம், எனதிந் திரியங்கட்குக் கோசரமாகா நின்றதூஉம், என்னணம் போந்ததோ எப்போழ்தத்தோ என்னையன்றி யிதற்கிருப்பு முண்டேயோ ? காரணமோ விது? காரி

யந்தானே? காரியமாயின் காரணம் யாதோ? காரணமிருப்பின் அந்தக்காரணம் தனக்கோர் காரணம் வேண்டியே காரியமாகாதொழி வது முண்டோ? இங்ஙனம் சங்கிலித் தொடராகிக் காரணகாரியம் முடிவின்றிச் சென்றால் அநவஸ்தாதோஷ மெய்தாதோ? யாதோ உண்மை யறிவோ முண்மை. காரியவுலகிற்குக் காரணன் சிவனே யென்பது உண்மையானால் அவனுமே பேரர் காரணம் வேண்டிக் காரியப் பொய்யாய்ப்பட்டொழியானோ? ஆகவே எங்கள் குருமணிச் செல்வமும் சிவனே யாண்டும் காரணகாரிய ரஹிதனே என்றார். இந்த விசாரணையைத் தாம் நல்லோர் வேதாந்த விசாரணை யென்றனர் போலும். சாஸ்திர விசாரணை, மதத்தின் விசாரணை, தத்துவ நல் விசாரணை யாவுமே யொன்றெனை முடிந்தது கண்டனர் சீரியர் தமக்கு. துவைதம் வேறு, விசிஷ்டாத்வைதம் தானும் வேறு, அத்வைதம் வேறு என்ற ஸ்வல்ப ஞானம் அடையார் சாதுக்கள். "ஓதரிய துவிதமேவத் துவிதஞானத்தை யுண்டுபண்ணு ஞானமாகும்" என்றார் எங்கள் தாயுமானார். "வேதாந்தம் சித்தாந்தம் வேறென்றார் கண்களிக்கும் நாதாந்த மோனநலமே பராபரமே" என்ற மேதாவியும் உண்மை யறைந்தார். "மாயாமாத்ரமிதம் த்வைதம் அத்வைதம் பரமார்த்தத:" வென்றே யறைந்தது வேதம் யாண்டும். "யத்திருஶ்யம் தந்நஶ்யம்" "யத்பாவம் தத்பவதி" என்ற வுபநிஷத மந்திரங்களையும் ஈண்டைத் தரிசித்தல் அத்யாவசியம். வேதகிரியின் அடியில் நின்றார் துவைதிகளாவார்; கோயில்கண்டார் விசிஷ்டாத்வைதிகள் கண்டே தம்மையும் அன்றே மறந்தார் அத்வைத சீலர். அத்வைதியோ துவதிதுவே! உள்ளது உள்ளதே! இல்லது இல்லதே! உள்ள சத்தை யெப்படிப் பேசினாலும் பாதகமில்லை யில்லை யென்ப. கடவுளென்றழையீர்! அகண்டமென்றோதும்! பாரமார்த்திக மெனப்பரசு மறையும்! அவாங்மனோ கோசரம் என்றும் முரசம் முழங்கும். பரப்பிரஹ்ம சநாதநம் என்றும் தாளம் போட்டே பாடிப்பஜியும். அல்லாவை யழையும்; எல்லாம் அவரே என்று மறையும்; கிறிஸ்துவைக்கூவும்; ஏகிப்தை நாடும்; புத்தரைப்போற்றும்; புத்தியைக்கூடும். சிவ! சிவ! என்றே நர்த்தநம்புரியும். ஹரி ஹரி யென்றே எக்காள மூதும். சூந்யம் சூந்யம் என்றும் கதறும். சுகமே துக்கமே சோகமே யென்றுசொன்மின். ஸ்வர்க்கமே நரகமே என்றே ஏங்குக. அன்றே, இன்றே, என்றும் பேசும். கட்டழகியைக்

காதல்மீதூரத் தழுவியே கொஞ்சுமின் ரஞ்சிதமாக. கண்ணே மணியே பொன்னேயென்று கலிதீர்க்கவந்த கண்மணிப்பெண்ணை முத்தந் தந்தே முறுவல் பூத்தே வாழ்மின். பொன்னைப்பூட்டிப் போற்றியும் வாழ்க! உள்ளதொன்றே. சத்தியம் ஒன்றே. இலது பலவே. அசத்யம் பலவே! பெண்டும் பிள்ளையும், பண்டம், பதார்த்தமும், நல்லதும், கெட்டதும், பெரிதும், சிறிதும், கோசரமாவதும், அகோசரமாவதூஉம், கொலைஞனும், கொடியனும், கள்வனும், கலைஞனும், ஏறுது சொத்தும், நிறைது சொத்தும், யாவுமதுவே, எல்லாம அதுவே. ஒன்றே பலவாய்ப் போந்ததை யுணர்திர் ஒன்றே காலத்திரயத்தும் ஸத்யம். ஒன்றை விட்டயாவும் அசத்யம். யாண்டும் அசத்யம். அன்பே ஸத்யம். அருளே சத்யம். பொருளேசத்யம். புண்யம் சத்யம். எதிர் மறையாவும் அசத்யங் கண்டீர். ஒன்றுதானும் அவித்தையானே பலவாய்க் கிரஹிக்கப்பெற்றதென்க. சிதாபாசனும், இதர பிரபஞ்சப் பதார்த்தங்களைப் போலவே அந்தப் பாரமார்த்திக பரப்பிரஹ்மமே யாவன். எனவே, உள்ளபடியே சிதாபாசன் செய்யும் உபாசனையாவும் அவன்றனக்கு அந்நியமான தெய்வமொன்றனை வடக்கே சென்றும், கிழக்கே பாய்ந்தும், மேலே பறந்தும், பாதாளமாழ்ந்தும் அடைவதற் கலவே: மற்று, தன்னை யுணர்ந்து, தன்னை யுணரா தொழிந்த காலத்தும், தானே தானய் விளங்கிய வுண்மையைத் தானே யுணர்ந்து தானய் நிற்பான் கருதியே பிரதீக உபாசனை ஜீவனொருவன் வளர்த்தனன் போலும். தனித்தனி வெவ்வேறாக விளங்குவதாகத் தோற்றமாகும் ஜீவர்கள் பலர்க்கும் அறிவேதாரகம் என்று கண்டுதெளிதல் அறிவாகும்மே! அறிவுருவான தெய்வம் குணமறியாது குறியறியாதே! சத்தும் சித்தும், ஆநந்தமயமும், அதன் குணங்களலவாம். ஸ்வரூபமேயாகும். அதையறிவதசாத்யம். நேதிநேதி என்றே பேசி முடித்தனர் பெரியோர்தாமும். இந்த நாமரூபத் தோற்றப் பிரபஞ்சம் அவித்தை தன்னையே காரணமாகக் கொண்டதென்ப. அவித்தையுந்தான் சத்தியமல்ல அஃதசத்து மாகாது, சத்து மாகா தொழிந்ததொன்றாம். இல்லாத பிரமை பிரமைக்குத் தந்தது பிரமையேபோலும். அவித்தைத் துவாரா கண்டவழி பிரமம் பற்பல வடிவாய்த் தோன்றும். நமது தேகேந்திரிய வந்தக் கரணம்யாவும் உபாதிகளேயாம். ஜீவரில்லை, ஜகத்துமில்லை, யாவும் கற்பித மென்பர் விஞ்ஞானி

கள், அவித்தை யின்னதென் றுணர்வதாற்றானே அதை யொழித்தல் கூடும். ஒழித்தவழியே இரண்டற்ற சத்ரூபப்பிரகாசமாம். கர்மம் சித்தசுத்தியை மாத்திரம் தருமாம். சித்தசுத்தி யடைந்த மாத்திரத் தானே ஞானமுண்டாம். ஞானமுண்டாகவே உண்மை வெளியாகும். தத்துவமசியே குருபதேசம்: அஹம்பிரஹ்மாஸ்மி சாக்ஷாத்காரமாம். கிரேக்கர்கள் "உன்னை நீயறி" யென்றோதியதை நம்மனோர் "ஆத்மாநம் ஆத்மநாபஸ்ய" வெனவோதினர் போலும். மீண்டும் அன்னார் "அதைப்பே உணர்ந்தனர் பாவு முணர்ந்தனர்" என்றே கூறினார். அன்பு மறிவு மொன்றே யென்றார், ஞானி சத்தை யுணர்ந்தானென்றார். பக்தன் அன்பிற் கரைந்தானென்றார்.

55 பிரஶ்னை:—வியவஹார மொடுங்கித் தானடங்கிய சாதுவொருவன் மீண்டும் ஏனோ பிரசங்கம் செய்வான்?

உத்தரம்:—பரப்பிரயோசநார்த்தமாக:—சாதந சதுஷ்டய சம்பத்தெய்திய சற்சிடன் பொருட்டே மௌநம் அடைந்த குருமணியும் விசாரணை மேற் கொள்வரென்க. அடுப்பேற்றிய பாத்திரம் தன்னில் விட்ட நெய் தளதள வென்ற சப்தம் பண்ணுதொழியுமோ? பக்குவமடைந்த பின்னர் சப்தம் நாஸ்தி; மீண்டும் அதனிடம் கிழங்கைப் பொரிப்பான், வறுப்பானிட்டால் மீண்டும தளதள சப்தம் எழுவதைக்காண்டீர்.

56. பிரஶ்னை:—தத்வ விசாரணை செய்து மநமடங்குந் திறத்தை நாடினோர் தத்தம் ஸம்ஸார விஷயமாய்ச செய்யவேண்டுவன யாவையோ கூறுக.

உத்தரம்:—பரா சத்தி பூஜை மேற்கொண்டோர் பாதிராத்திரிப் போதுஶ்மஶாநமடைந்தே பிணத்தின் மீதிருந்து சத்தி மந்திரம் ஜபித்துக்கிடப்பராம. காரியசித்தி யாவதற்கு முன்னம் பிணத்தின் தேகத்திற் சிற்சில துஷ்ட தேவதைகள் பிரவேசமாகிப் பிணத்தின் வாயைப்பிளந்து காட்டுமாம. அத்தருணத்தே அதிபயங்கரமான இடியோசை யொன்று அங்கமதிர எழுந்தொலிக்குமாம். கோரரூபமான பிணமும் அதிகோர மிகத் தோன்றுமாம. அப்போழ்தத்துப் பிணத்தின் வாயினிடமாக வாய்க்கரிசியும், கடலைப்பொரிமா, மாமிச முதலிய படைப்பிராம் துஷ்ட தேவதைக டமக்கு சத்தியைப் பூசிக்கும் விற்பந்நமணிகள். இறுதியில் சத்தியும் பிரசந்நமா

இப் பிரசாதம் தருவளாம். அதுபோல், ஞாநத்தை யபேக்ஷித்தவர் பலர் ஸம்ஸாரத் தேவைகட்கு வேண்டியவைகளை முன்னமாகவே சேகரித்து வைத்துக்கொண்டிருத்தல் வேண்டும். வேதாந்த விசாரணை நடக்கும்போது, மனைவி போந்தே "ஹே! வேதாந்தமே" சோறும் சாறும் வேண்டுமென்பளே· சோறில்லை யென்றால் வேதாந்தத்தையே பக்ஷித்து விடுவள் போலும். ஆகவே, நித்திய தரித்திரம் சாதுக்கட்கு விரோதமே செய்யும்.

57. பிரஶ்னை :—உண்மைச் சாதுக்கட்டம்மைப் போலிச்சாதுக்கள் ஏனோ அடையாதொழிவார்?

உத்தரம் :—மஹாபதி பிரதையாம் உத்தம ஸ்திரீயும் தனது பர்த்தாவைச் சேர்ந்து அடைந்த சுகங்களை வந்தவர் போனவர் யாவரிடத்தும் சொல்லாள் சொல்லாள். வேசித்தாசியைக் கண்டாற் சீறுவாள். தன்னை நிகர்த்த தர்ம பத்நியைக் கண்டாளானால் கனிந்து கூறுவள் உள்ளத்திற் கொண்ட குதூஹலத்தை.

58. பிரஶ்னை : பகவானையடையப் பெற்றோர் ஏனோபிறவற்றை யொழித்தார்?

உத்தரம் :—விளக்கை யடைந்த பூச்சிகள் மீண்டும இருட்டை யடையக் காணோம் காணோம். சர்க்கரைப் பொதியில் விழுந்த எறும்பும் சர்க்கரைதன்னில் மாளா நின்றதே, இராகமொழித்தார் விராகம் கொண்டார்.

59. பிரஶ்னை :—கிறிஸ்துவைப்போன்ற ஞாநதீரர் யாது வரினும் கலங்கார் கலங்கார்! புந்நாயனைய புல்லறிவாளர் அற்பதுக்கம் வரினும் கலங்குவர்! தெய்விகஞாநம் பெற்ற கிறிஸ்து தாமும் மனித குமாரனாகவே மனிதனாகவே வாழ்ந்தார் பலாண்டு. மனித தேகம் கொண்டு, நடந்தும், கிடந்தும், இருந்தும், திரிந்தும், அவதியிலாழ்ந்தும, சுகத்தை நாடியும் இரைச்சலிட்டுக் காலங் கழிக்கும் நாயும், நரியும், குரங்கு கோட்டானும், செம்மறியாடும், கண்மூடிப்பூனையும், கொடுவிஷப்பாம்பும், கொடுக்குடைத்தேளும், இன்னோரன்ன யாவைதாமும், துக்க ரூபங்கொண்ட வொன்றைக் கண்ட வக்கணம் கனாந்து பறந்தன பல்காவததூரம். முழுமக்கட்கும் முநிமக்கட்கும் ஏனோ இவ்வள வேற்றந்தாமும் காணக்கிடப்பது?

உத்தரம் :—தேகம் சத்தியம், இந்தியம் சத்தியம் புலன்பொறி சத்தியம், உலகம் சத்தியம், உலகப்பொருள்கள் யாவும் சத்தியம், இந்திரியா தீதப்பொருளே வசத்யம் என்று கோடல் பாமரர்க்கழகாம். எதிர்மறை ஞானம் யாண்டும் கோடல் பண்டிதர்க்கழகே. கிறிஸ்து ஞானியே வாயினராதலால் புளியம்பழமென வாழ்ந்தனரென்ப. ஓடுடைந்தும் பழத்திற் கானிவந்ததில்லையே. இற்றை ஞான்றுப்பாதி யுலகம் ஏத்திப்பரவும் கிறிஸ்துநாதரும் தம்மருந்தேகம் கொலையுண்டபோதும் தேகஞானம் ஒழிந்து நின்றனர் என்பதே உண்மை. தேகமே யானென மருளும் முழுமூடரும், தத்துவங்களினது செயலையே தன செயல்களென மாயா பிராந்தியடைந்துக் கிடந்த முழுமகன்றானுமே யமபடர் தம்மைக் காணவஞ்சுவர். "ஜந்தூநாம் நரஜந்மம் துர்லபம்" என்ற சுருதியின் ஷ்ருதப முணர்ந்தும் "ஜாதஸ்ய மரணம் த்ருவம்" என்ற சுலோகத்தினதர்த்த புஷ்டியையாய்ந்தறிந்தும் பிரவர்த்தியா நின்ற சத்புருஷர் புலிவாய்ப்பட்டபோழ்தத்தும், சிவோக மந்திரானு சந்தானம் மறந்தனரில்லையென்றே யெம்பெரியோ ரோதினரென்க. மநம் இருந்த காலத்தே மாத்திரம் தேகபாதை யொருவனுணர்வான் போலும். மநம் இறந்த சமயம் (மற்றொன்றிற் பாய்ந்து கிடந்ததாக) தேகதுக்கம் வுணருமொருவன் கிடைப்பதசாத்தியமே யென்ப, ரணக்களத்தில் சத்துருசுத்தவீர னொருவன் தன் இடதுகையை வாளால் வீசி யொழித்தானாகவும், மற்றவன் அதை யுணராதும், உதரப் பிரவாகத்தைக் காணாதும், வலக்கை வாள் கொண்டு பலரை வெட்டி வீழ்த்தினனென்றும் யாம் கேட்டிருக்கின்றோம். சமாதியில் மனமில்லை யாதலால், சிவயோகியை யவன்றனது தேகேந்திரிய துக்க சுகங்கள் சாராவென்ப.

மாக்ஷிமை தங்கிய வலெக்சாந்தர் இந்து நதி தீரத்தில் ஒரு மஹானைக் கண்டு வணங்கி நீவிர் எமது தேசம் வருவீராக வென்று விநயத்துடன் விண்ணப்பித்தும் அவர் இசையா தொழிந்தனராக; ஐய நீவிர் என் மனோரதத்தைப் பூர்த்திசெய்ய விசையாவிடின் என் வாளுக்கே நும்முயிரை யிரையாச்குவே னென்றனனும். பெரியர் கூறுவார் : ஹே! குழந்தாய் ! நன்று! நன்று! நின்னஞ்ஞானம் கிடந்தவாறு நன்று! இத்தகைய பெரும் பொய்மை நீ யிது காறும் கூறியிராய் ! என்னையோ நீ கொல்லுத லொல்லும் !

"யயேநம் வேத்திஹந்தாரம் யஃசைநம் மந்யதேஹதம்
உபௌ தௌ நவிஜாநீதோ நாயம்ஹந்தி நஹந்யதே."

"நஜாயதே ம்ருயதேவா கதாசிந்நாயம் பூத்வா பவிதாவாநபூய:
அஜோ நித்யஃஸாஃவ தோயம் புராணோ நஹந்யதே ஹந்யமாநே
நைநம் சிந்தந்தி ஃஸ்திராணி நைநம் தஹதிபாவகஹ
நசைநம் கிளேதயந்தியாபோ நசோஷயதி மாருத:"

இதைச் செவியேற்ற சக்ரவர்த்தி வெட்கித் தலைநாணி யம்மஹானைப் பூசித்து விடைபெற்றுச் சென்றன னென்றது கர்ண பரம்பரையாய் வழங்காநின்ற சரிதமொன்று. ஞானஸ்வரூபிகளாவார் தேகம் சத்தியமல்ல அசத்தியமே யென்றுண்மை யுணர்ந்தனராக தேகபாசம் விட்டனர் போலும். தேகம, பிரகிருதியினது குணவேறு பாட்டால் நேர்ந்த பூதங்களால் ஆக்கப்பட்டுள்ளது. பிரகிருதியோ சார்வதா மாறுதலடைந்து கிடக்கும ஒரு தனிமுதல். அதினின் றும் உற்பவித்த விகிருதிகளாம் பௌதிகங்களின் அணுக்கூட் டங்கள் கணக்கிறந்தன ஒருங்கு சேர்ந்துவாழப் பெற்றதே இந்த தூலதேகமென்க. அவ் யணுக்கூட்டம் மாறிமாறித் தோன்றியும் மறைந்தும், மறைந்தன மண்டுந் தோன்றியும, தோன்றின மீண்டும் மறைந்தும, இன்னணம் வர்த்தித்த காரணம்பற்றி தூல தேகம் நிலைபேறுயிற்றென்க. அணுக்களின ஸ்ருஷ்டியும, விநாஸ மும், க்ஷணத்திற்கு க்ஷணம நமமுடைய தேகங்களிடம் நடந்து வருகின்றன. அல்லாக்கால தேகம் அனமேற விழுமாம். அதா அன்றியும், அன்று ஞாயனிடம வாழ்வடைந்த பூதவணுக்கள் இன்று, சந்திரமண்டலத்திலும, இற்றைநாள் மானிடதேகத்தைப் போஷித்த வணுக்குழாம், பிற்றைநாள் மிருகாதிகளுடல முழுவன் றும், வழிநாட்களில தாவரத்துக் குடிபுகுந்தும வர்த்தியாநின்றன வென மேற்புல விஞ்ஞானிகள் முழங்காநின்றன ராகையால், எனது தேகம் நிஜதாக்ருதி, அவளது பொன்மேனி, அவனதிழிந்தவுடலம் என்றவெற்றுச சொற்றொடர்கட் கிடனில்லையென்ற வுண்மையை யாராய்ந்துணர்வோமாக! சிற்றருவி யொன்றினிடமாயோடும் ஜலத் தில் சிறு சுழல்கள் உண்டாமாறுபோல் பிரகிருதியென்ற பெருநதி யில் எழுந்தெழுந்தன வெழுந்த பல சுழலமோகமாய்த் தோற்றமா மென்ப. அருவிச் சலவணுக்குழாம் ஆங்காங்குச் சுழலுண்டாக்கிச்

சுழன்றே வெளிப்போந்தன வென்பது ஸர்வஸாமஞ்ஜஸமென்க. எனுமெதனுமென்ற நாமரூபஸஹித தேகங்களாம் ஏகதேச பதார்த் தங்களிற் போந்துழன்று வொழிந்த பூதவணுக்களை யாரே அகக் கண்கொண்டு எனுமெதனுமென்று காண்பரோ நவிலுமுலகே!

" அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே விழியம் பொழுக
எத்திய மாதரும் வீதிமட்டே இருகைத் தலைமேல்
வைத்தழு மைந்தரும் சுடுகாட்டு மட்டே
பற்றித் தொடரு மிருவினைப் பாவபுண்ணியமே."

என்றுண்டனர் நங்கள் குபேராவதாரம்.

" எத்தாயர், எத்தந்தை எச்சுற்றத்தார் எம்மாடு
சும்மாடா யேவர் நல்லார் செத்தால் வந்துதவுவா ரொருவரில்லை
சிறு விறகாற் றீமூட்டிச் செல்லா நிற்பர்." என்றே

கனாநதார்நாவுக்கரையர்.

" தந்தையார், தாயாருடன் பிறந்தார் தாரமார் புந்திரரார் தாந் தாமாரே, வந்தவா றெங்ஙனே போமாறேதே மாயமாமிதற் கேது மகிழவேண்டா" வென்ற திவ்யாவ ஸரத்தையும் பொய்யுலகம் சிந்திக் கடங்குவதாக!

" உறவாகு மெலவெனை நீர் தொடாபதியல் பன்றுகு முயிரகட் கெல்லா முறவாகு ஞான மணிபகையாகு மருஞான முய்த்து நோக்கி னுறவானவதை யடைந்து பகையான விதைநீக்கி யொருமையாக உறவாத றனக்குத்தானே யென மற்றுறவு விடுத்துறையு மென்றான்'

" அறிவை நோக்கி டிலதற்குத் தாய்தந்தையிலை யிவ்வுட லதனை நோக்கி லிறையு நீருபாதானகாரண மன்றிருமாதபயினி லுண்டாகுங் குறியிது விங்காயின் மண்ணிலெனைப் பெறுதவரிலையக் கொள்கை நீருநிறையு மதியிலரே நீர்நில்லுமெனை விருவரையு நீத்துப்போனுன்."

"நின்னுடைய நாயகனை நினதுள்ளே நிற்கமாட்டா துன்னுடைய நாயகனென் றென்றனையே கருதிநீ யுழல்வதென்னே! மின்னனை யனிடையாய் கேளீன வருக்குநாயகனேர் மேலாமீசன் அன்னவனை யே தேடிப்போகின்றே னெனவர சற்கரிவை சாற்றும்."

என்பன வாதித்திராவிட ஸூக்திகள் நங்குமாரதேவர் சரித்திரத்தின்கட் பெறப்பட்டதையு முய்த்து நோக்குதிர் உலகீர்.

பல நூற்றாண்டுகள்முன் னிந்திர புரத்தை இந்திராணியென்ற பெயரிய பெண்ணரசிச் செங்கோலோச்சிச சிறந்தக் காலையில் ஒருநாள் அப்பொன்னகர் காண்பான **அல்லமன்** என்ற முத்தனொருவன் ஆண்டுப் போந்தனனென்ப. போந்த புண்ணியன் காற்றின் வாடையைக் குறிப்பாக் கொண்ட துருமபே யென்னக் குறிப்பொன்றின்றி யூர வலம் வந்தவன் வேளாளர் வீதி நடந்தனனாக **பவதீபிக்ஷாம் தேஹி** என்றனன். கநகை குலதிலகன் பால்யனொருவன் பாலசூர்யனென்ன வொளிரவான், பதினாறுடையன் **பாஸ்கரஸ்வாமி** என்ற பெயரினன் யதியை வந்தித்தழைத்துப படைத்தனன் பிக்ஷை: அவனன்பையுங் கூட்டி யுண்டனாசாது. உண்டு களித்தவர், அவனதுள்ளங் களிக்கவும ஒன்றுகூறி புறம்போந்துக் கிடந்தார். சிறுவன் இருந்த விடத்தே இருந்தனன் சமாதியில. தந்தை தாயையும, பந்துமித்ரரையும்,பெண்டு பிள்ளையையும மறந்தான். மனம துறந்தான். தனது சொத்தை யொழித்தவன் நனது சொத்தையு மடைந்து விளங்கினன்.

அவனன்னை காதற் கிழக்கியருகே சென்றனள். **என்வாழ்வே, உயிரே, அன்பே** யென்றனள்: தாயும் போந்து **கண்ணேமணியே கலிதீர்க்கவந்த செல்வமே** என்றனள். தந்தை நெருங்கி **அப்பவோ, ஐயவோ,** நின்னிலையாதோ வென்றனன். பேசான்பேசான் சிவயோகியானான. பதினைந்து நாழிகைப்போதாயிற்று. அண்டை வீட்டு சாம்பசிவனும ஆரவத்துடனே நுழைந்தனனிங்கே: வெறிக்க வெறிக்கப் பார்த்தனன் சிறுவனை. ஐய ! ஐய ! அறிவேன் அறிவேன் உண்மையைக் கூறுவேன். கேளும். சூழ்ச்சிதேறுமென்றனன். இன்றுகாலை ராஹுகாலந்தன்னில் ஒரு சொக்குப் பொடிக்காரன் ஈண்டைப் போந்தனன். அவன்லலாடம் தன்னில் பூதி பூத்ததில்லை. அவன் கண்டாந்தானும கண்மணி பணியா முண்டை கண்டமே! அவனோ சிவனடி பாறுவான்பாபி: அவன் **பிரச்சன்ன பௌத்தனேபோலி வேதாந்தியோ !** அறிபே னுண்மை அறிவதெற்றிற்கு ? சைவவேடம் பூண்டானில்லை. சண்டாள னென்பதிற்றடை யொன்றில்லை. அந்த லோபிக்கும் நமது குழந்தை சோற்றைப்போட்டுச் சுகத்தைக் கொடுத்தான். **பிரச்சந்ந பௌத்தனும்,** நன்றியறிவின்றி

குழந்தை கையிலிருந்த ரொக்க ரோசனத்தைத் தட்டிக்கொண்டு, பொடியைத்தூவி மயக்கம் கொடுத்தே சென்றனன் பாபி என்றனன் மூடன். வீட்டுக் குடையான், வீட்டை யணுகான், பணத்தாற் பெரியவன், குணமொன்றுமில்லான், கூலினன் காலதூதுவரன்ன சேவகர் தம்மை. பிடித்துக் கொணர்ந்தின் குண்டுகட்டாக சந்யாசிப் பிணத்தை யென்றே ஆஞ்ஞை விதித்தனன் பொய்யன். சாம்பிணங்களாம் மானிடக் குரங்குகள் கும்பர் கும்பராய்ப்போந்தனர் வீதியில்: கண்டனர் சுவாமியை, கதறினர் உதறினர், பல்லைக் கடித்தனர். பதறிவிழுந்தனர், விட்டிற் பூச்சி யென்ன நெருங்கினர். நெருங்கினர் எனினும், நம்மஹானைத் தொட்டனரில்லை. மனுஷ்யதெய்வம் கண்ணைவிழித்தது அக்கினிப் பொறிகள் பறந்தன யாண்டும். பயசம்பிரமத்துடன் ஓடுங்கிநின்றனர் நரயமபடர்தாம்: பேதைமாக்களே யாவுமுணர்ந்தேம் யாம் வருவல் நீவிர் விரைந்து முன் செல்கவென்றனராரியர். ராஜ பரிவாரமென்ன கோலாகலத்துடன் நடந்தது உலகம். அரியேறென்னப் பெருமித நடையுடன் போந்தனர் பெருமான்: நெருங்கினர் பிரபுமாளிகை தன்னை: பிரஜைகள் அடியற்ற பனைபோல் விழுவார் விழுவார் அவர் தாமரைப் போதில். கிருஹமடைந்தவர் கண்டனர் காட்சி: ஆநந்தம் பூத்தனர் தாமாய் நின்றனர் தன்னைக்கண்டனர் திருவருள் விலாசம் இருந்தவாறீதோ வென்றே பரப்பினர். வாழ்த்தினர் குருவை; வாழ்த்தினர் சிவனை; வாழ்த்தினர் ஹரியை; ஸோகம் பேசினர். சிவோஹம் என்றனர். தத்வமசியைச் சிந்தனை செய்வார்.

வெண்ணெய்கொண்டு அவன் கபாலம் தேய்த்தனர். சமாதி கலைந்து பஹிர்முகப்பட்டனன் சாது தானும்: வியவஹாரம் புகுந்தனன் மனப்பற்றொழிந்தும்; ஆணும் பெண்ணும் ஆர்த்தனர் ஆர்த்தனர். லஜ்ஜை யொழிந்தனர். இடி இடியென்று சிரித்தனர் சிறுமியர்: கைம்பெண் வளர்த்த கழிசிறைமகனும் ஸாகஸம் பழகிச் சதவிற் போந்தனன். முழுமகனோர் சார் சிரக்கம்பஞ்செய்ய மூடையோர் சார்கரக்கம்பம் செய்தனள் இவனும், அவனும், உவனும், யாவனும் மந்தஹாஸம் தவழ்ந்த நகைகளைப் பிரகாசப்படுத்தினர். பெரியவனை எதிர்கொள்ளக் கிளம்பிய பிரபுவின் காமக்கிழத்தியும் உல்லாச நடை நடந்தாளென்க. பிரபு பெருமானும் தனது ரதியைக் காணவே மந்மதாகாரமாய் விளங்கினாரென்க.

"மானினம் வருவபோன்று, மயிலினந் திரிவபோன்றும்,
மீனினம் மிளிர்வபோன்றும், மின்னின மிடைவபோன்றும்"

பொம்மெனப்புகுந்த சந்திரமுகியும், சுந்தரவதனையும், அப்ஸரமாதும் மோஹநமாலையும், சாகுந்தலையும், சுலோசனதேவியும், காந்திமதியும் கற்பகவல்லியும், தோகைபோன்ற வுடையும், அன்னம்போன்ற நடையும், கிள்ளைபோன்ற மொழியுங்கொண்டு தத்தம் ஆசை நாயகர்களோடு கைகோத்து உரையாடி நகையாடினர் உண்மை. 'சர்வம் அஹம்மயம் ஜகத்' என்றும் பாடினர் உண்மை.

பாஸ்கரனுள்ளம் வசந்த ருதுவைப்போலக் குளிர்ந்து பூரித்தது. ஆசானைக் கண்டவன் தாயைக்கண்ட கன்றுபோலவும் துணையைக்கண்ட சக்ரவாகப் பக்ஷிபோலவும் புளகாங்கிதங்கொண்டு பூரித்துப் பாரித்தான். அங்குமிங்குமாக ஊசலாடிக் கொண்டிருந்த மாயாரூபிணிகளை வெறுத்தும் நோக்கினன். ஜநனமரண சம்சாரமாகிய வனர்த்த பரம்பரைக்கு ஹேதுவான அகங்காரத்தை யொழித்த தன் னுயகனை வணங்கிக் கூறுவான்.

"இறந்தனர் பிறந்தபய னெய்தினர்கொ லென்கோ
மறந்தன ரறிந்துணர்வு வநதனர்கொ லென்கோ
துறந்த வுயிர் வந்திடை தொடர்ந்ததுகொ லென்கோ."

மெய்க்குருவும்,

"பூதமீயலை பொறிகளுமலை யலைபுந்தி
ஏதுநீயலை யிவற்றினை மயங்கி யானென்னும
போதநீயலை யென்றிவை யனைத்தும் போக்கிச்
சோதியாகிய பிரமமேநீ"

யென் றுபதேசித்து அவனை இல்லறத் துறவிலிருத்தி விடைபெற றுச் சென்றனர்,

பலநாட் கழிந்தன. பலபேரொழிந்தனர். பலபேர் உதித்தனர்: பலபோர் மூண்டன. பலாபலன் நேர்ந்தன. பக்குவம் பழுத்தனர் பாமரர்தாமும். மெய்பொய்யாயிற்று. மெய்யே யிது பொய் யென்றனர் பொய்யரும். இறந்தவர் சென்றவிடத்தை யுணரா தொழிந்தனர் பேதைமாக்கள்: பிறந்தவர் முன்னேயிருந்தவிடத்தையும் சொ

(64 - ம் பக்க முடிவில் சேர்த்துக்கொள்க.)

ன்றுரில்லை. ஸ்மஸான வைராக்யம் ஸ்மஸானத்தோ டொழிந்தது. புராணவைராக்யம் புராண மந்திரத்தைவிட்டு வெளியேறவில்லை. பிரஸவவைராக்யம் மூன்று ரிதுவி லொழிந்தது போலும். யௌவன கௌமாரதசைகளிற் போந்தாரனைவரும் தத்தமை ஸ்வர்க்கலோக வாசிகளென்ன நினைத்து மகிழ்ந்தனர். யௌவனம் கௌமாரம் செத்து, வயோதிகம் பெற்று, அவதியுற்றழிந்தார் யாவரும் தத்தமை பூமியிலூரும் புழுக்களெனவே எண்ணினரென்க. இன்னணம் பல பகல் உலகம் நடந்ததாம். அநந்தரம் ஒருதினம், பாஸ்கரன் படுக்கையிற்றும் கிடந்தவழியே சமாதிகூடினுன். பிரமரந்திரம் தன்னில் அவன் அறிவு ஒடுங்கிநின்றது. பகலவன் போந்ததுணராது, இரவு பகலற்ற வகாந்த வெளியில் பாஸ்கரன் நடனம் புரிந்தான்போலும். அவன் இல்லக்கிழத்தி யெட்டிப்பார்த்தனள். காமக்கிழத்தி கிட்டி நெருங்கினள். மூச்சுப்பேச்சில்லை. வெறிக்கூப்பாடிடத் துவக்கினர். மோதி விழுந்தனர். புரண்டனர். அரண்டனர். அலறினர். உலறினர். பந்து ஸ்திரீகள் யாவரும் போந்தனர். ஓ வென் றிரைந்தனர், பந்தேனச் சென்றெனக் குதித்துத் துக்கநடனம் செய்வாராயினர். மாரிழவு கொடுத்தனர். மயிரிழவு முடித்தனர். முன்பாட்டெழுந்தது. பின்பாட்டெழுந்தது. அவரவர் துக்கம் அவரவர் அழுதனர். புருஷனை யழைத்து அழுதாள் ஒருத்தி. பிள்ளையை நினைத்துக் கதறினுள் ஒருத்தி. இழந்த பணத்தைச் சிந்தித்துப் பொங்குவாள் ஒருத்தி. அண்டை வீட்டுக்காரி அடைந்த வாழ்வுக்காக அழுவாள் ஒருத்தி. இப்படிப் பலவித நோக்கங்கொண்டே அழுதனர் பேதைப் பெண்கள்.

இத்தருவாயிற் போந்தனர் குருமணி: உண்மையுசாவினர். பெற்றதாய் கூறுவாள்! அடிகாள் கேண்மின்! செல்வன் மாண்டனன். பாபியான் மாண்டிலேன், செல்வன் பிழைப்பானாயின் எனதுயிரையுந் தருவலென்றாளே! எனதுயிரையும் இப்போதே தருவல் என்றனள் பத்நியும். என்றன் உயிரும் கூடத் தருவல் என்றனன் றந்தை. யானுந் தருவல் என்றனள் தங்கை. யானும் தலைவனும் கூடத் தருவமெங்களாருயிர் என்றனள் தமக்கை. பந்துக்கள் யாவரும் ததாஸ்து கூறினர். மித்திரர் ஆமேன் என்றே நவில்வார். பணத்தைப் பறித்த பண்டித வைத்தியனும், யானும் எனதுயிர்போக்குவே னென்றான். கேட்டனர் குருமணி: சந்தோஷ மென்றனர்; சூழ்ச்சி இதுவே ஒருயிர்போதும்: ஈண்டைக் குழீஇருந்த யாவராயினும் ஒருவர் தம்முயிர் துறக்க தீரங்கொண்டால் பாஸ்கரன் பிழைப்பதுண்மை யென்றனர். சக்கரம்போட்டு அக்கரம் அடைத்து, அண்டத்தினுள்ளதைப் பிண்டத்திற்காட்டி, தந்திரம் கூட்டி மந்திரம் ஓதி, பற்பல தேவதைகளை ஆவாஹனம்செய்து, பாலு நெய்யு நறுந் தேனும் பாகும் கலந்து செய்த பிராசநந்தன்னில் வைவஸ்வதன்றன் சத்தியை யிறக்கி யருகே நின்ற பலரையும் விளித்து அன்புமிக்குடையீர்! யாவராயினு மொருவர் இந்த பிராசநத்தையுண்டு ஆவியை யிழந்து குமாரனை எழுப்புமின் என்றனர் தபஸ்வி. ஆந்தை யென்ன விழித்தனர் பலரும். அம்மம்ம! அசாத்யம் அசாத்யம் என்றனர் மித்திரர். தந்தை, தாயை நோக்கினன். தாயுமவனை நோக்கினள். தாரம் ஏங்கினள், எந்தையையுசாவுவலென்றனள். அவடந்தை ஐம்பது காவததூரத்திற் போந்து கிடந்தனன். தங்கை குழவியைத் தழுவுவாள். இந்தப் பிரதிபந்தம் என்னைத் தடுக்கின்ற தென்றனள். தமக்கைப் பொன்னத்தானைக் கலந்து யோசிப்பே னென்றனள். பொன்னத்தானும் பொன்னேரி சென்றிருந்தனராம். பந்துவர்க்கங்கள் பரபர வென்று நழுவலாயினர். மித்ரவர்க்கங்கள் விளையாட்டுக்குச் சொன்னேம்; வினையாய் முடிந்ததென்றனர். இந்தச் சமயம் வேறொரு லீலையைச் செய்தனர் பெரியர். நன்று நன்று: நுங்கள் அன்பின் பெருக்கம் கிடந்தவாறும் நன்று. இன்னும் அரைநாழிகைப் போதில் பிள்ளை உயிர்த்தெழுவான். இவண் வதியும் ஒருவரை எமன் பிடியாது விடான் என்றனர். பறந்தனர் பறந்தனர் சந்தைக்கூட்டம் பல்காவததூரம். தந்தை பறந்தனன், தாயும் பறந்தனள், பெண்டு

பிள்ளை, தங்கை, தமக்கை யாவரும் பறந்தனர். உயிர்த்தனன் பாஸ்கரன்; அடிகளடியில் விழுந்தனன் எழுந்தனன். தொடர்ந்தனன் குருவை; தொடர்ந்த இருவினை தொடராதொழிந்தன. தொடர்ந்தது யோகம். தொடர்ந்தது ஞானம். தொடர்ந்தது வீடு.

60. பிரஶ்நை :—யாவரோ பெரியர் யாவரோ சிறியர்?

**உத்தரம்** :—ஞான சூர்யர்தாம் பெரியர் பெரியர். ஞான சூன்யர்தாம் சிறியர் சிறியர். பரனைப்பாடிய பத்தரே வாழ்ந்தார். பொய்யைப் போற்றிய பொய்யரே தாழ்ந்தார். சங்கர சிவனைப் போற்றிய நாளே பிறந்தநாளாகும். இதர நாளெல்லாம் பிறவாநாளே "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" என்றார் சமயகுரவரும். பொன்மலையருகே மகருஷிகள் பலர் கூடினர் ஒருநாள். வேத வியாஸரும் போந்தனராண்டு. சுகப்பிரம்மமும் இருந்தன ரென்ப. புற்றீசலென்ன நெருங்கிய இருடிகள் வியாஸ மாமுனியை வந்தித்தனராம். புண்யபோற்றி, புராணபோற்றி, தலைவபோற்றி, தந்தாய்போற்றி, தாரகப்பொருளின் அம்ஶம் போற்றி, என்றனர் பிராம்ஹணர். முனிபுங்கவனும், சுகப்பிரமத்தின் திருவடிப்போதில் விழுந்தனர் பன்முறை. தொழுதனர் எழுந்தனர். அசூயை யடைந்தார் ரிஷிகள் தாமும். அவர்க ளந்தக்கரணத்தின்கண் ஜநித்தசங்கை வித்தென உயிர்த்து விருக்ஷமாய் வெளியே பரிணமிப்படைந்து போநததுபோலும். பதினெண் புராணம் பற்பல விதமாய்க்கூறி பெருமைபாடல் கண்ட புண்ணிய வடிவினைப்! லௌகிக முறைமையை நீர் கடிந்ததென்னே கூறுவீரென்றனர். ஐயன் அன்புடனறைவான். உத்தம முனிவரே, இவர் ஞானவாகாரம்பெற்ற பெரியர்; இவர் தம்மைப் பூசிக்கும் பெரும்பேற்றைப் பெற்றேமென்றனர். அற்றேனும் ஐய!சுகப்பிரம்மம் நுமக்குப் புத்திரனன்றோ? இளைஞரன்றோ? வயதால் முதிர்ந்தவர் பிதாவேயன்றோ வென்றனர் யாவரும். புத்ரசம்பந்தம் தேகத்தைப் பொறுத்தது. அறிவை நோக்கிடிற் றாய்தந்தை யில்லையே யென்றனராரியர். அதா அன்றியும் ஒன்றுகூறுவார். ஐயன்மீர்! ஈண்டைக் குழீஇருந்த நுங்கள் வயதெலாம்ஒன்றும், இரண்டும், இரண்டேகாலும்,முக்காலரைக்கால், வீசம் பூஜ்யம், என்ற கணக்கிலடங்குவதாகுங் கண்டீர். பரனைப்பஜித்த பெற்றியால் யாமும் வாழ்ந்தநாட்கள் சேர்ந்தஆயுசும் ஐந்தரைவயதை யெமக்குச் சொல்லும். இவரோ ஏழு வயதை யடைந்த ஏழாட்டை

யர் என்றனர் வியாஸர். அவர் பிறந்த பொழுதே துறந்து பெம்மானைப் போற்றுவதே வாழ்வெனக் கொண்டவர். ஒருகால் அவனை புத்ரவாத்ஸல்யத்தால் பின்றொடர்ந்து சென்றேம். ஹிமாசலச்சாரலின் ஒருசார் பரந்த மானஸ தீர்த்தத்திற் ஜலக்கிரீடை செய்துக் களியிட்டிருந்த அப்ஸரஸ்திரீகள் எம்மைக் கண்டனராகத் தம்தேகம் மறைத்தனர், பட்டைக்கொண்டு. சுமுகவநிதைகாள்! குமரன் ஒருவன் இவ்வழி சென்றனன்; அவனை நீவிர் கண்டதுண்டோ வென்றேம். அவனைக்கண்டும் நுங்கள் ஆக்ருதிகளை மறைத்தது முண்டோ வென்றேம். ஐயரே, கண்டோம் கண்டோம், கண்மணி தன்னை யாங்கள் அவர்க்கு மறைக்கத்தக்க தொன்றில்லை. ஸர்வவியாபியாய் விளங்கும் சுகருக்கு யாங்கள் மறைப்பது யாதோ? எங்கள் தேகமெங்கும் அவர் ஊடுருவி நின்றே யாவு முணர்ந்துளாரெனவே, எங்கட் கந்நியமா யவரைக்காண்பது முண்டோ வென்றன ரென்றே கூறினர் பிதாவும். சிரவணம் செய்த ரிஷீசுவரரெலாம் விழுந்தனர் விழுந்தனர், விழுந்தே கிடந்தனர் அப்பன் கமலபாதத்தில்.

61. பிரஶ்னை:—தேகமாகாத தேகியை யென்னணம் நாம் உணர்தல் கூடும்.

உத்தரம்:—ஸ்வப்நாவஸ்தையில் தேகம் செயலற்றுக்கிடப்ப, தேகி மனக்கருவி கொண்டு வியாபாரம் செய்தலானும், சுழுத்தியில் தேகம் தேகமாய்க் கிடப்பவும் மனமென்ற தொன்றும் தலைகாட்டா தொடங்கி நிற்பவும், சுகத்தைப் புசித்தான் ஒருவன் தேறுதலானும் தேகத்தைச் சிற்சில சமயம் பிரியாமற் பிரிந்துவர்த்தித்த வஸ்து வொன்று தூரதேச வர்த்தமானங்களை பிரத்தியக்ஷமா யுணர்ந்து கூறும் காக்ஷியைக்கண்ட நற்சாக்ஷிகளானும் நாம் தேகியையுணர்வோமாக.

62. பிரஶ்னை:—நிகழும் தேகபோகங்களை யபேக்ஷித்துக் கிடந்த தேகி யித்தேகத்தை யடைந்த காலமுன் இருந்த துண்மையேயென நிறுவத லென்னணம்?

உத்தரம்:—அவனவனடைந்துள்ள வாசனை மாத்திரத்தானே இதை நிரூபணம் செய்வது கூடும் போலும். "வாதனைப் பழக்கமே மநநினைவதுதான்" என்றனர் நங்கண்மணி தாயுமானவரும்.

அதிபால்ய தசையினும், ஒருவன் சாதுவாயும் ஒருவன் துஷ்டனாயும், மூன்றாவான் அறிவிற் சிறந்தும், நாலாவான் உலக்கைக் கொழுந்தே யென்னக் கிடந்த புத்தியை யடைந்தும் விளங்குவதேனோ? ஒருவன் மன்மதாகாரமான தேககாந்தியை யடைவானேன்? வேறொருவன் பிறவிக்குருடனாய் முடிவானேன்? ஒருவன் அரசன்வயிற்றி லுதிப்பானேன்? மற்றொருவன் வறுமையின் கர்ப்பம் புகுவானேன்? குழவியொன்று பலவற்றை விரும்புவானேன்? சிலவற்றை வெறுப்பானேன்? கோழிக்குஞ்சு நரியைக்கண்டு பறப்பானேன்? வாத்துக்குஞ்சு வெளிப்போந்த வன்றே நீந்துவானேன்? கிள்ளைக்குஞ்சு பூனையைக்கண்டு கத்துவானேன்.

அமெரிக்கா தேசத்தில் வீடுகூட்டி யொருத்தி, சுத்தநிரக்ஷரகுக்ஷி ஸம்ஸ்கிருதபாஷை புணர்வதென்னணம்? அவளுமே சிவதமஸ்வப்நத்தில் ஓதியதெங்ஙனம்? ஜர்மனி தேசத்து முழுமகனொருவன் ஆங்கிலபாஷையில் தத்வஞானம் ஓதினனென்ப சுஷுப்தி நிலையில். அதுதான் சம்பவமாவதெப்படி? வழிநாட்காலையில் ஆங்கிலபாஷையில் அக்ஷரமொன்றும் உணராதொழிந்தனன் என்றனர் பெரியர்.

63. பிரஸ்னை:—தேகத்தை யொழித்த ஜீவன் அடையும் காட்சி இப்பிரபஞ்சக் காட்சியைவிட கோடியடங்கு விசேஷமாமன்றோ?

உத்தரம்:—சூர்யப்பிரகாசமே நம் வாழ்நாள் என்று கொள்வோம். சூர்யாஸ்தமனமே மரணாவஸ்தையை யொக்கும். இரவிற்றோன்றும் அண்டாண்டங்களே ஆத்மாவின் (ஜீவான்மா) ஸ்வதந்திரக் காட்சி யாகும்போலும். அணுவுக்கணுவான சிறிய பொருட்களை யெல்லாம் பிரகாசப்படுத்திய சூர்யன், மகத்தான ஞானபானுவின் சிருஷ்டியாய பிர்ம்மாண்டத்தை மறைத்ததுபோல்—ஜீவகாலத்தில் நாமனுபவிக்கும் அற்பசுகங்கள் தேகத்தைவிட்டு வெளிப்பட்ட ஜீவனடையும் அற்புதக் காட்சிகளை மறைத்து மயக்குமென்பதில் விரோதமில்லையன்றோ?

64. பிரஸ்னை:—மேற்புலத்தாரது சாஸ்திரங்கள் மரணத்தைக் குறித்து செய்த சித்தாந்தம் யாதோ?

உத்தரம்:—அதிபயங்கரமான பொய்க்கதைகள் இத்தேசத்தில் வழங்கப்பட்டு வந்தாலும், ஐரோப்பிய பண்டிதர்கள் அவைகள்

யாவையும் முற்றும் திரஸ்கரிக்கின்றனர். மரணம் தத்வ வொடுக்கமேயொழிய வேறொன்றல்ல. பிணியிலுள்ள கொடுமையும் மரணாவஸ்தையில் கிடையாது. அகோரமான கஷ்டங்கள் தேகம் அடைந்தவிடத்தும், ஜீவன் பிரஜ்ஞையற்றுப் போவதால் துன்பமடைய ஹேதுவில்லை. மரணாநந்தரம் ஜீவன் தேகவிலங்கு முறியப்பெற்று சுயம்பிரகாசமெய்தி மகத்தான வழியையுமடையக்கூடும். கடாவேறிப் போந்த காலன் காட்சி பௌதிகசாஸ்திர வல்லுநர் காணுதொழிந்தனரென்க. பேதைமாக்கட்குத் தத்தமனமே நமனாய்ப் போந்ததென்க.

65. பிரஸ்நை:—ஜீவாத்மா உருவுள்ளதோ இல்லதோ கூறுக.

உத்தரம்:—ஆத்மா தேகத்தினது உருவத்தையே அடையா நிற்கும் என்று கோட லமைவுடைத்தே. பல நியாயங்காட்டி இதை நிரூபிக்க முயல்வம். யாதாமொருவன் யாதொரு காரணம் பற்றி கைகா லிழந்த போது, ஒழிந்த உறுப்புகளளவு அவனிடம் ஆத்மா குறைந்து விளங்கக் கண்டிலம். உள்ள உறுப்புக்களில் நேரிடும் ஸ்பர்ச வுணர்ச்சியாவும், ஒழிந்த வவயவங்களிலும் நேர்ந்தன போன்ற உணர்ச்சியையும் முடவன் அடைந்தா னென்றும், பிறவிதொட்டே அங்கஹீனம் தொடர்ந்த ஒருவனுக்கு இல்லாதனவாகிய உறுப்புகள் உள்ளனபோன்ற வுணர்ச்சி பலகால் நேர்ந்ததென்றும் பரீட்சித்துணர்ந்த மேதாவியர் கூறுகின்றனர். ஆனால், தேகசம்பந்தமொழிந்த ஜீவன் தேகவுருவத்தைப் பின்னர் வஹிப்பதும், வஹியா தொழிவதுஉம் நாம் உணரப்பெறல் கஷ்டசாத்ய மென்றனர் பண்டிதர். ஜீவாத்மாவுக்கே சொந்தமாயுரிய திணைபாலிடம் கூறுவது அசாத்யம். முன்னாளில் சில வைதிக சமயத்தினர் விசேஷமாய் செய்துவந்த மதுமாம்ஸாதி சேவனம் வேதத்திற் பிரமாணம் பெற்றதெனக் கண்டு யஞ்ஞத்தில் பலியிட நிறுத்திய பசுக்களைக் கண்ணுற்றுக் கலங்கி "வேதமே உனை நம்பினேன்" என முறையிட்ட வேதியர் தாம் உணர்வரோ வறியே முண்மை.

66. பிரஸ்நை:—ஒரு ஜீவனை வேறொரு ஜீவன் உணர்தலெப்படி?

உத்தரம்:—அதற்கும் இதற்கும் இடையிற் போந்துள்ள ஒரு பொருள் துவாராவே அது சாத்யமாகும். காற்றில்லா விட்டால்

சுரோத்ரம் கேளாது. வெளிச்சம் அன்றி சக்ஷு காணுதாம். ஆகாசமன்றி ஒன்றிலொன்று சம்பந்தம் அடைவது கூடாது. ஒவ்வொரு ஜீவன் உள்ளும் புறம்பும் வியாபித்து ஒன்றை யொன்றுணர வுபகரித்து விளங்கும் ஒருபரவஸ்து வேண்டப்படுதலை யுணர்திருல கீர்.

67. பிரஸ்ணை :—அதை மூன்றென்றும், ஐந்தென்றும், எட்டென்றும், அநேகமென்றும், எமது எமதென்றும், இதுவே யென்றும், அதுவே யென்றும், பெரிதென்றும், சிறிதென்றும, சேய்மையென்றும், அண்மை யென்றும், கறுப்பென்றும், சிவப்பென்றும், உலகம் முறையிட்டுக்கதறிக் கிடப்பானேன்? சைவன் ஹரியைப் பழிப்பானேன்? வைணவன் ஹரனைச் சுடுவானேன்? வாய்ச்சண்டையேன்? கைசரண்டையேன்? அர்த்தத்தை யனர்த்தம் செய்தலேன். கற்பிதக் கதைகளும், பாசுரங்களும் தலையெடுத்தாடுவானேன்?

உத்தரம் :—"காக்கை யுகக்கும் பிணம்". உண்மையுணர்ந்த உத்தம சாதுக்கடமக்கு த்வேஷ புத்தி யாண்டும் கிடையாதே.

யே நமஸ்யந்தி கோவிந்தம் தேநமஸ்யந்தி ஸங்கரம். |
யோர்ச்சயந்தி ஹரிம் பக்த்யா தேர்ச்சயந்தி வ்ருஷத்வஜம் ||
யேத்விஷந்தி விரூபாக்ஷம் தேத்விஷந்தி ஜநார்த்தநம் |
யேருத்ரம் நாபிஜாநந்தி தேநஜாநந்தி கேசவம் |
ருத்ராத் பிரவர்த்ததே பீஜம் பீஜயோநிர்ஜ் ஜநார்த்தநம் |
யோருத்ர: ஸ: ஸ்வயம்பிரம்ம
யோப்ரம்ஹா ஸஹுதாஸந:||
ப்ரம்ஹ விஷ்ணுமயோருத்ர: அக்நிஷ்டோ மாத்மகம் ஜகத |
புல்லிங்கம் ஸர்வமீசாந: ஸ்திரீலிங்கம் பகவத்யுமா |
உமாருத்ராத்மிகாஸ் ஸர்வா: ப்ரஜாஸ்தாவர ஜங்கமா: |
வ்யக்தம் ஸர்வமுமாரூபம் அவ்யக்தந்து மஹேஸ்வர: |
உமாஸங்கரயோர் யோக: |
ஸயோகோ விஷ்ணு ருச்யதே |
யஸ்துதஸ்மை நமஸ்க்காரம் குர்யாத் பக்திஸமந்வித: |
ஆத்மாநம் பரமாத்மாநம் அந்தராத்மான மேவச |
ஜ்ஞாத்வா த்ரிவித மாத்மாநம் பரமாத்மாந மாஸ்ரயேத் |
அந்தராத்மா பவேத் ப்ரம்ம பரமாத்மா மஹேஸ்வர: |.
ஸர்வேஷா மேவ பூதாநாம் விஷ்ணுராத்மா ஸநாதந: |

அக்ரம் மத்யம் ததாமூலம் விஷ்ணு ப்ரம்ஹ மஹேஶ்வரா:।
கார்யம் விஷ்ணுக்ரயா ப்ரம்ஹ காரணந்து மஹேஶ்வர:।
ப்ரயோ ஜநார்த்தநம் ருத்ரேண
மூர்த்தி ரேகாத்ரிதா ஸ்திதா ।
ருத்ரோ ருத்ர: ஜகத்விஷ்ணு ஸ்ர்வஜ்ஞாநம: பிதாமஹ: ।
ஸ்ரீப்ரம்ஹ விஷ்ணு ருத்ரேதி
யஸ்தம் ப்ரூயாத்விசக்ஷண: ।
கீர்த்தநாத் ஸர்வ தேவஸ்ய
ஸர்வபாபை: ப்ரமுச்யதே ।
ருத்ரோநர உமாநாரீ தஸ்மைதஸ்யை நமோநம:।
ருத்ரோ ப்ரம்ஹ உமாவாணீ தஸ்மைதஸ்யை நமோநம:।
ருத்ரோ விஷ்ணு உமாலக்ஷ்மீ தஸ்மைதஸ்யை நமோநம:।
ருத்ரஸ் ஸூர்ய உமாச்சாயா தஸ்மைதஸ்யை நமோநம:।
ருத்ரஸ்ஸோம உமாதாரா தஸ்மைதஸ்யை நமோநம:।
ருத்ரோதிவா உமாராத்ரி: தஸ்மைதஸ்யை நமோநம:।
ருத்ரோய ஜ்ஞ உமாவேதி தஸ்மைதஸ்யை நமோநம:।
ருத்ரோ வந்ஹி உமாஸ்வாஹா தஸ்மைதஸ்யை நமோநம:।
ருத்ரோ வேத உமாஶாஸ்த்ரம் தஸ்மைதஸ்யை நமோநம:।
ருத்ரோ வ்ருக்ஷ உமாவல்லி தஸ்மைதஸ்யை நமோநம:।
ருத்ரோகந்த உமாபுஷ்பம் தஸ்மைதஸ்யை நமோநம:।
ருத்ரோர்த்த: அக்ஷரஸ்ஸோமா தஸ்மைதஸ்யை நமோநம:।
ருத்ரோலிங்க உமாபீடம் தஸ்மைதஸ்யை நமோநம:।
ப்ரம்ஹா ஜலமத்யேது ஸர்வபாபை: ப்ரமுச்யதே ।
ஸர்வாதிஷ்டாந மத்வந்த்வம் பரம்பிரம்ம ஸநாதநம்।
ஸச்சிதாநந்த ரூபந்த தவாங்மாநஸ கோசரம் ।
தஸ்மிந் ஸுவிதிதே ஸர்வம் விஞ்ஞாதம் ஸ்யாதிதம்ஶுக ।
ததாத் மகத்வாத் ஸர்வஸ்ய தஸ்மாத் பிந்நம் நஹிக்வசித் ।।.

68. பிரஶ்நை :—பகவதுபாசனையை அர்சசா மார்க்கத்திற் செய்யவேண்டு மென்பது நியதமேயோ ?

**உத்தரம் :—**" அகண்ட ஸச்சிதானந்த ஸ்வரூபமாயுள்ள பரவஸ்துவை ஸகுணமாகவும் நிர்க்குணமாகவும், ஸகுணநிர்க்குணமாகவும், இவை மூன்றுடன் இவற்றைக் கடந்ததாகவும் அறிந்து விவகரித்து வரும் சங்கர பாஷ்யாநுஸாரிகள், வைஷ்ணவர்கள், நீல கண்ட பண்டித பாஷ்யாவலம்பகர்கள் முதலிய வேதசம்பந்திகள், தத்தம் ஆத்மார்த்த பரார்த்த பூசைகள் ஏதாவதொன்றிற் பாவனையாகச்



உமாகார்கன

செய்யப்படுமென்றி அந்யதா கூடாதெனக் கூறுவ"ரென்பர். சிற்சில பிரபல பண்டித மணிகள் "அவாந்தர கற்பித மதங்களைக் கண்டித்து வைதிக சித்தாந்தத்தி னுண்மையை இனிது நாட்டி கல்வி கேள்வி யுடையார்க்கு ஸம்போதா மிருதத்தை யூட்டி உபகரித்து ஸாதுகளைச் சந்தோஷிப்பித்தன"ரென்று பலபக்த சிரோமணிகள் கூறக்கேட்டுளோம். அதனுண்மையை யீண்டைச் சாவதானமாய்ப் பரியாலோசிப்பாம்.

வைதிகரென்றே வெளிப்போந்தா ரொருசாரார் 'பிரஹ்மம் அரூபம், அநாமயம்' என்று கேட்கப்படும் சுவேதாசுவதர வாக்யத்தையும், 'அரூபம் - அவ்யயம்' என்று கேட்கப்படும் கடோபநிஷத் வாக்கியத்தையும் 'கண்—வாக்கு—மனசுகளுக்கு பிரஹ்மம் விஷயமாகமாட்டாது. பிரஹ்மத்தால் கண் முதலியவை பிரகாசமடைகின்றன' வென்றெழுந்த கேனோபநிடத வாக்யங்களையும், 'அதிர்ஸ்ய அசரீர' என்று கேட்கப்படும் தைத்திரீய வசனத்தையும் 'படைப்பைத் தொழுவார் கொடிய வந்தகாரத்தை யடைவார்க' ளென்று கேட்கப்படும் வாஜஸநேய வாக்யத்தையும் உதகரித்து பிரசங்கித்து மகிழ்வரென்ப கீழே போந்தவைகட் கெதிர்மறையான தர்மங்கள் படிக்கப்படும் அநந்தம் சுருதி பாஹுள்யங்களைத் தரி

சித்த வைதிகர் பிரஹ்மத்துக்கு ரூபமில்லையென்று கூறி வெளிவரா ரென்பது முண்மை. நேத்ரேந்திரியமும், வாக்கிந்திரியம் இரண்டும் ஜடங்களானகையால் அவைகள் பிரம்மத்தை யுணராவென்ற துண்மையே. மனம் என்னும் அந்தக் கரணமும், ஜடமேயாக அதுதான் எப்படி யுணரும் பிரஹ்மத்தை? மனம் ஒழியாதவரையில் அதனிடம் நிகழும் படங்கள் (விக்ரஹங்கள்) ஒழிவதெப்படி?



சிவ சுப்பிரமணியர்

“உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன் கண்முதற் புலனாற் காட்சியு மில்லோன்” என்று கூறிய பெரியோர்க்கு “மறையினா லயனான் மாலான் மனத்தினால் வாக்கான் மற்றுங் குறைவிலா வளவினாலுங் கூறொணாததாகி நின்ற விறைவனார் காலபாதம்” எனவு மெழுந்த திராவிடத்தொடர்கள் உடம்பாடாமன்றோ? சிவம் உலகெலாமாகி வேறாயுடனுமாய் நின்ற தென்ற நிலைமையினைத்தென் றுணர்ந்தாரே உண்மையறிவர் போலும். பிரஹ்மம் திரிபுடி ரஹிதம் என்று வேதமோதிய முறைமையும், இது வென்றதெல்லாம் பொய்யென்றான், என்று மேலோர் கூறிய வழுத்தவுரையும் கருவிக்ரணங்க ளோய்ந்த விடத்தில் ஆத்மா பரமாத்வை அநுபவிப்பதற்கும் நிலையை யுத்தேசித்தே யென்க. பேதைமாக்களிடம் அவைகளைச் சமர்ப்பித்தல் வழக்கன்று. B. A. பரீக்ஷைக்காக வேற்பட்ட நூலொன்றை A. B. யோதும் குழந்தைக்குக் கூறுவதிலென்ன பயன்? சிறுமியர் சிறார்கள் பொம்மைக்கலியாணம், பொம்மைச் சோபனம், பொம்மை விரு

ந்து செய்தலழகேயாம். பொம்மைக்கு அன்னம் படைக்கும் நம் மக்கள் அப்பொம்மைகள் அன்ன முண்ணுமெனக் கண்டனர் கொல்லோ?

பிரதம கலாபரீக்ஷை கொடுத்தவ னொருவன் தன்னின் மெலியாரை நோக்கித்தானே பஹுஞானி என்று கூறிக்கொண்ட வவசரம் தன்னினு முயர்ந்த சேதனர் தமமை யுணரா தொழிந்தனனென்க. நிர்க்குணமான பரனது நாமங்கள் கேட்கப்படும உபநிடதங்களில் குணவிசிட்ட நாமங்களும குறைவின்றிக் கிடக்கின்றன. "பரனை இத்தன்மையனென்று ஒருவன் நிர்த்தேசஞ்செய்வது அளந்து செல்லுந் தோறுங் கடந்து செல்லு நிழலை யொருவன் முடிவு காண்டலையேயமானும்"



கமலக கண்ணன.

பக்திமான்கள் கண்கள் கவர்ந்து ஆநந்திப்பது கல்லையுஞ் செம்பையுமன்று, அவற்றில வேறாகாது விரவியபரனது உருவத்தையேயாம். அதர்மத்தை யொழிக்கவும, தாமத்தை நாட்டவும பலகால் பரமன் ஆங்காங்கும் தோன்றின னென்பது சாவ ஸம்பிரதிபந்நமாம். அவனதருளுருவத்தை யநுபவித்த லசங்கத மாகுமேயோ? காலன் கொண்டு சென்ற நந்தந்தை தாயையும, பத்நிசோதரி முதலியோ

ரையும், அன்னவர் படங்களைக் கண்டவழி அன்புடன் சிந்தித்தாறுத லடையா தெழுந்தோமோ கூறுக வுலகே! ஞானத்தால் நேரே சிவ னைவணங்கும் யோக்யதை யொருவனடைந்த போது சிவனதுருவத் திருமேனி ஞானத்தி னிடம் லீனமாகு மென்ப. எனவே, பற்பல வவசரத்தைத் தழுவியே எழுந்தன பற்பல பூஜை.

69. பிரஶ்னை. :—எவ்விதவைதிக லௌகிக கர்மங்களையும் முடிப்பதற்கு இன்றியமையாததா யுள்ளதுயாதோ ?

உத்தரம் :—அறிவேயாம்: பற்பல பெரியோர் பற்பல சமயங்களில் பற்பலவிதமாகக் கூறி யாங்கு அவ்வவ் விஷயங்களைச் சந்தர்ப்பாநுபத்தமாக வநுபவித்து சமயோசிதமான புத்திநுட்பத்தா லவை தம்மைப் பிறர்க்குச் சமர்ப்பித்துபிரயோஜனப்படுத்தவேண்டும். பிரதீகோபாசனையை விட்டவரோ யாண்டும் பெரியராகார். விக்ரஹாராதனத்தை யாஶ்ரயித்தவரோயாண்டும் அறிஞராகார். அறிவுருவாயினும் வேண்டற்பாலனவல்ல விக்ரஹங்கள்! ராஜாராம் மோஹன்ருய் - பாபு கேசவ் சந்திரசினா் முதலிய மேதாவிகளை இப்பூவுலகம் முழுமையும் வந்தித்ததென்க. ஐம்பதைத்தாண்டி அறுபதை நெருங்கிய ஆஸ்திக வாதிகள் பத்நி உயிர்த்திருப்பவும் ஆசைக்கண்ணுட்டியை இரண்டாந்தரம் வதுவைசெய்துக்கொள்ள விசசித்தல் முற்றும் நியாய விருத்தமே. போலிப்பெரியர் ஜநாசார சீர்திருத்தச் சதவிற்போந்து ஏகபத்நிவிரதம் இன்னர் பல்லோர்க்குப் போதித்தலழகோ? எனவே, வாய்ஞானம் ஒருவர்க்கும் பிரயோசனம் செய்யாதென்க. அவரவர் தத்தம் பக்குவத்தளவே ஒவ்வோருபாசனையைப் பழக வேண்டுவ தத்யாவசியமேயாம். எதுவும் எப்போதும் சித்தாந்த மாகாதென்க: யானிட்டதே சட்டம். சொன்னதேவேதவாக்கியம். என்பது விவேகியின் கூற்றாகாதே!

கல்வியிற் கலைமாதையும், அறநெறியி லருந்ததியையும், கருணையிற்கௌரியையும், எழிலில் இந்திராணியையும், சம்பத்தில் மஹாலக்ஷ்மியையும் நிகர்த்த புண்ணியவநிதையான மஹாசமர்த்தை யொரு யுவதி தன்மனத்தை யிடைவிடா துறைவிடமாகக் கொண்ட நாயகனை அறிவையூட்டி வசப்படுத்தினளென்று கர்ணபரம்பரையாய் வழங்கப்பெற்றுவரும் கதையை யீண்டைப்பேசுவாம்.

வடிவெடுத்துவந்த மன்மதன்போலும் விளங்கிய தங்காதலன் குருவிணையைக் கடவாது நடத்தலே தங்கடப்பாடெனக் கூறினளுகப் புன்னகைதவழ்ந்த செல்வியவ்வணை யாதோவென்றுசாவினளென்ப. ஆர்யபுத்ரனறைவான்: சர்வநியந்தாவாகிய பரமேசுவரனது திருவருள்கூட்ட சிவாநுபூதிச் செல்வராய்விளங்கும் ஸ்ரீமத் ஸச்சிதானந்த சுவாமிகள் திருவடிப்போதின்கண் அடைக்கலம்புக்கு அவரது தெவிட்டாது தித்திக்கும் வாக்கியாமிருதத்தைக் கர்ணபுடத்தாலருந்தி யானந்தித்துக் கிடக்கும் யான் எந்தஸ்திரீயையும் சிலையாகக் காணக்கடமைப் பட்டுள்ளேன். இந்த ஞானமே எனது யௌவனனுபவங்கட்குத் தடையாய்முடிந்தது. நீயோ என் கண்மணியாவை. நின்னை புமையாகக்காணும் யான், என்னணம் நின்னைக்கடிமணம் புரிந்து கலக்கத் துணிவல் என்று இலச்சையுடனும் சங்கையுடனும் கூறினனென்ப. மங்கைப்பருவ மிவட்கேதகும் தகுமெனப் பார்த்தவர் யாவரும் பன்முறைகூறக், கண்டவர் கண்ணைக்கவர்ந்த குமரியும்

"விற்றவிழ வொணிமிர மெய்யணிகள் மின்ன
சிற்றிடைநுடங்க வொளிர் சீரடிபெயர்த்து"ப்

பிராணபந்துவைச் சித்திரித்த பதுமையென்வனுகி அவன்பால் அன்பாவரும்பிக் காதல்காய்த்துப் பாரம்பழுத்த வுள்ளத்தினை அக மகிழ்ச்சி காரணமாக நேரிட்ட முகமகிழ்ச்சியாற் பிரகாசிப்பித்து தனது கரத்தேந்திய மணமாலையை யவனுக்குச் சூட்டி அன்ப! நீவிர் அடியாளை சங்கரியாகக்கொண்டதுண்மையே; பரமசந்தோஷம். அடியாளும் அடிகடம்மையே சங்கரனுகக் காண்கின்றேன். சங்கரன் றேவியே சேர்வல் என்றனளாம்.

70. பிரஞ்னை :—பரமேஸ்வரன் திருமுன்பும் பற்பலர் மானிடப் பதராய் முடிதலேனோ?

உத்தரம் :—அவரவர் அடைந்த பாழ்மனங் காரணமாக! கற்பக விருக்ஷ நீழலிற் போந்த பேதையொருவன் தானுமோர் அரசனுக வெண்ணினனுகவன்றே அரசனுனன் கண்டீர் அரம்பையையுடனே அணையவும் கோரினன். 'அணைந்தானவளை. துர்வாசனைகள் தொடர்ந்தனவவனை. புலியொன்றுவந்தே அடித்

துக் கொன்று மென்செய்வதென்றான். அப்போதே யோர் புலியும்வந்து கொன்றதாமவனை. அதுபோல், கடவுளையடுத்தும் யானோ வேழை! யானோ மந்தன்! நாயினேனையும் நாமகள் அணுகாள்; பூமகள் பாராள்; என்றே கதறிக் கதறிக் கிடப்பானொருவன் யாண்டுந் தரித்திரனே; எமமான் கிருபையா லெல்லாமுடையேன் என்றே சங்கற்பித்துக்கொண்டு சாதுவும் எல்லாமடைந்து இன்புறுவனென்றார் எங்கள்குரவர்.

71. பிரஶ்னை :—திருவருள்நகும் சமயங்கள் யாவையோ?

உத்தரம் :—விபக்த குடும்பமாய்ப் பல்லாண்டு வாழ்ந்த பங்காளிகள் பலர் எனதிது வென்றும், நினதிதுவென்றும் பிதுரார்ஜ்ஜிதத்தைப் பங்கிடும்போதும், பிரபஞ்சத்தை நீத்துப் பறக்குமுயிரைத் திருப்புவல் மீண்டும் என்றே நாட்டுப்புறத்துத் தன்வந்திரி யறைந்தபோதும், திருவருள் நகுமே!

72. பிரஶ்னை:—பகவந்நாம சங்கீர்த்தனம் எத்துணை நன்மையை விளைக்கும் கூறுக!

உத்தரம் :—முன்னொருயுகத்தில் முழுவுலகாண்ட மன்னனொருவன் பிராமணனொருவன் பிராணனைமுடித்து, ஹத்தியை யார்ஜ்ஜித்து மகரிஷியொருவராஶ்ரமம் அடைந்தான். ரிஷிபுங்கவனும் கைலை வாழ்வைக் காண்பான் சென்றவர், அதுகாறும் ஆஶ்ரமந்தன்னை யடைந்தனரில்லை. ஆண்டு வீற்றிருந்த ரிஷிபுத்ரனிடம் தங்குறைதன்னை விண்ணப்பித்தனன். ஞானச்செல்வனும் அரசரேறே! மும்முறைநீவிர் சிவநாமத்தைச் சொல்வீராயின் தொடர்ந்ததீவினை தொடரா தொழியுமென்று கூறினன். அத்தருவாயிலாஶ்ரம மடைந்த முனிவர் பிரானும் உள்ளம் வெதும்பிக் கோபங்கொண்டனர். "பேதாய்! குலப்பதமொன்ன முடிந்த மூட! யாதுகூறினை? கீழேசென்ற எண்ணிறந்த ஜநநங்களிற் செய்த கோடிக்கணக்கான கர்மம யாவும் ஒருதரம் சிவனை விளித்தாற் பறக்குமே! மும்முறையென்ற போதனைக்காக பிடிப்பாய்சாபம். சண்டாள ஜநநம் எய்துக நீயே" யென்றனரொன்றே ஹிதிகாசம் கூறும்.

73. பிரஶ்னை :—சுகதேவர், நாரதவிருடி, சங்கராசாரியமூர்த்தும், வசுநாதர், முதலிய மேன்மையாளர் பிறந்தபொழுதே துறந்தும், பத்தி

யிற் சிறந்தும், அசாத்தியமான குணானுபவங்களைப் பிரகாசிப்பிப்பதும் யாங்ஙனம்?

உத்தரம்:— யாண்டு மாகாசத்தினிடமாய்ச் சஞ்சரிப்பதாகப் பேசப்படும் ஹோமா பக்ஷிகள் அவ்வாகாசத்தின் கண்ணே முட்டையிடுவதாகவும் பெரியோர் கூறுவர். அம்முட்டைகள் பூமியின் கவர்ச்சிச் சக்தியால் பூமண்டலத்திற் கிழுக்கப்பட்டு விழும்போதே மத்தியில் குஞ்சுகள் வெளிப்பட்டுக் கீழேசெல்ல மனமற்று, இயற்கையறிவும், பூர்வவாசனையுந் தூண்ட மேல்நோக்கிப்பறந்து சொந்த க்ஷேத்ரத்தை (எதாஸ்தானத்தை) யடையுமென்று சாஸ்திரம் பேசாநின்றது. சுகர்முதலிய பெரியோரும் தத்தம் இளமைப்பருவத்தினும் இகலோக போகபோக்யங்களைத் துய்க்க வெண்ணங்கொள்ளாமல் ஞானாகாரம்பெற்று பிரமாநு பூதிமான்களாய் வாழ்ந்தனர்போலும்.

74 பிரஶ்னை:—ஜநகனாதிமுத்தர் பிரபஞ்சத்திலிருந்தும் வேறாகி வாழ்ந்தன ரென்ப தெவ்வண்ணம்?

உத்தரம்:—சில நீர்ப்பறவைகள் ஜலத்தில் என்னேரம் மூழ்கிக் கிடப்பினும், தங்களிறகுகளை நனைத்துக்கொள்வதில்லை. முத்தன் உலகத்தில் வாழ்ந்தும் உலகம் அவனுள்ளத்தில் வாழ்ந்ததில்லையாம். ஓடம் ஜலத்திருப்பினும், ஜலம் ஓடத்திலிருக்கப்படாது.

75. பிரஶ்னை:—பரபக்தியிற் சிறந்த சீரியர் உலகப்பொருட்களை யிச்சியாதொழிந்ததேனோ?

உத்தரம்:—மெய்யன்பென்ற பெருவலைவீசி அரசரேற்றின் சிறுகுருளையைப்பிடித்து உள்ளத்திற்கட்டி பூரித்துபபொங்கும் கோமளவநிதைச் செல்வியுந்தாம் குட்டம்கண்ட ஊமை, முடவன், பிறவிக் குருடன் முதலியவாய புன் மக்கடம்மைப் பொருளென மதியாள்; பரமேஸ்வரனையடைந்த செல்வன் இன்றிருந்து நாளைவீயும் போகங்கடம்மைத் துய்க்க விரும்பான் விரும்பானென்க.

76. பிரஶ்னை:—நஶ்வர வாழ்வினைை யொழித்து சாஶ்வத வாழ்வைத்தந்த தங்குருமணியைத் தெய்வமாக்கொண்டு பூசித்தவுடன் பரஞானச்செல்வர் பலரைக் காணுழி, என்னணம் அவர்களைப் போற்றா நிற்பன்,

உத்தரம்—தனது பர்த்தாவிடம் அன்பெலாம் செலுத்திய நங்கை தனது மாமன் மாமி பாட்டன் பாட்டி முதலிய பெரியோர் தம்மைப் பணிவுடன் உபசரித்த காட்சியைக் காணீர்.

77: பிரஸ்னை :—உத்தம ஜென்மமாகிய மனிதஜென்மம் வாய்க்கப்பெற்று வாழும் ஜீவர்களுள், விஷயங்களை விஷத்தினுங் கொடியனவாக் கண்டு, இந்திரியங்களை யடக்கி யொடுக்கி, மனதை ஒருவழிப்படுத்தி, சுத்த புத்த நித்த சொரூபராயும், சர்வபரிபூரணராயும் விளங்காநின்ற சாக்ஷாத் பகவானுடைய பாதாரவிந்தங்களை யடைந்து, அவனை யன்றிப் பிறிதொரு பொருளையும் இப்பிரபஞ்சத்தின் கண் காணாது ஜீவன் முத்தர்களாய் விளங்கும் நல்லோர் நீங்கலாகவுள்ள வேனைய பாமரர் தாமும் சிற்சில சமயங்களி லுண்மை யறிவாநந்தவடிவுடைச் செல்வத்தை யாசிரயித்து வாழ்வாரென்றல் சம்பவமாகுமேயோ ?

உத்தரம் :—புலித்தோல் போர்த்துப் பைங்கூழ் மேயும் பசுவுக்குச் சமமாவார் பலருள்ளும் ஏகதேசிகள் சிலர் ஒரோ வழி "மயிர் நீப்பின் வாழாக்கவரிமா வன்னார், உயிர் நீப்பர் மானம் வரின்" என்ற வள்ளுவர், குறளுக்கிலக்கியமாய் ஒழுகியுள்ளாரென்பது பூலோக சரித்திரத்தால் விசதப்பட்டது போலும். தாமசம் தாழ்ந்து ஸத்வம் பிரகாசமான போது, மெய்யன்பரென நாடகம் நடித்துக் கூடா வொழுக்கத்தைக் கூடிக் கிடந்தே காலங்கடத்தும் புல்லறிவாளரும், ஒவ்வோர் சமயம் பகவானைப் பேணிவாழ்வார் போலும். பிராம்ஹணன் அட்ட திஞ்சுவை லாடு, பேணி, ஹல்வா முதலிய பக்ஷணத்தையே மொய்த்துக்கிடந்த ஈக்கடாமும் அவ்வழிப் போந்தகடையன் ஒருவன் கொண்டு சென்ற மலமூத்ராதி கஸ்மலவாசனை நிறைந்த பாண்டம் கண்டவக்கணமே துர்நாற்றத்தை யடைந்ததைக் காணிரோ பெரியீர்.

78. பிரஸ்னை :—காலாந்தரங்களி லாங்காங்கும் போந்து உலகத்தை ரக்ஷித்த அவதார விக்ரஹங்கள் எந்த மூல புருஷனைக் காரணமாகக் கொண்டனரோ கூறுக.

உத்தரம் :—சாக்ஷாத் ஈஸ்வரனையேயாம். சச்சிதானந்த வருட்பெருங் கடலினின்றும் வெளிப்போந்த ஞான ஸ்வரூபம் ஓரவசரத்திற் கண்ணனாய் நின்றது, ராமனா யாண்டது, புத்தனாய்ப் பிரவர்த்

நித்தது, கிறிஸ்துவாய் மீண்டும் வேறிடத்தி லெழுந்தது. மகம்மது நபியாய் விளங்கியது. மூழ்கி மூழ்கி யெழுந்த தொன்றே.

79. பிரஶ்நை :—ஜபதபா நுஷ்டானம் முதலிய பத்தி, யாருக்குண்டு? யாருக்கில்லை?

உத்தரம் :—செப்புப் பாத்திரம் அன்றாடம் விளக்கிச் சுத்தி செய்தாலன்றி துருப்பிடித் தொழியும். தங்கப்பாத்திரம் அப்படியன்று. அபக்குவிகள் அவ்வப்போதும் அம்மையப்பனைப் பஜித்துப் போற்றல் அத்யாவசியமே. பக்குவம் பழுத்த பண்டிதமணிகள் பாடியும் பரவியும் நர்த்தனம் புரியார்.

80. பிரஶ்நை :—வியவகாரம் விட்ட விவேகியின் பிரவர்த்தகம் எத்தகைத்தோ கூறுக.

உத்தரம் :—மணவினை முடிந்தபின், பிறந்த அகத்தைத் துறந்து புகுந்த அகத்திற் போந்து புதுமை புதுமையாய்ப் பணிபல வியற்றிப் பூரித்த சிறுமிதான், செல்வனை யீன்றே வியவகாரம் முற்றும் மறந்து குழவியாருயிர் தனதெனக் கொண்டுக் கொஞ்சிப் போகம் அடைந்ததைக் காணீர். முத்தே, பவழமே, முத்தந்தருவாய், முத்தீந்தருவல், அணைவல் என்றே யவளும் பலபகல் போக்கிய நியதியை யறிதிர். அஞ்ஞான காலத்தே அஞ்ஞான அந்த காரத்திற் கிடந்து விஷய வின்பங்களை யாசிரயித்தபுமானும், அவனருளாலே அவன் றாள் வணங்கி அவனுய் நின்ற வவசரந்தன்னில்,

“மண்ணுதிபூத மெலாம் வைத்திருந்த நின்னிறைவை
கண்ணுரக் கண்டு களித்தேன் பராபரமே.” என்றும்,
“மண்ணு மறிகடலு மற்றுளவு மெல்லாமுன்
கண்ணி லிருக்கவு நான் கண்டேன் பராபரமே.” என்றும்,
“அகமேவு மண்ணலுக் கென்னல்ல வெல்லாஞ் சொல்லிச்
சுகமான நீபோய்ச் சுகங்கொடு வாபைங் கிளியே” என்றும்,
“ஆருமறியாம லெனையந்தரங்க மாகவந்து
சேரும் படிக்கிறைக்குச் செப்பிவா பைங்கிளியே.” என்றும்,
“எந்த மடலூடு மெழுதா வென்னிறை வடிவைச்
சிந்தை மடலா லெழுதிச் சேர்ப்பேனோ பைங்கிளியே,” என்றும்,

பாடிப்பரவிப் பலாண்டுகூறி ஒருமானை யேந்தி, ஒருமானைத் தழுவி, ஒருமானை மறைத்த ஒருமாமணியின் மூர்த்தி லாவண்

யத்தி வீடுபெட்டுப் பிறந்தநாளைப் பிறந்த நாளாக்கி, புண்ய சமூகமாய் விளங்குவனென்ப.

81. பிரஸ்னை:—ஸ்வர்க்கம் நரகமாய் மாறுதல் கூடுமோ? நரகம் ஸ்வர்க்கமாய் நிகழுமேயோ?

உத்தரம்:—யயாதிமகாராசன் பூவுலகத்தே புரிந்த பல சுகிர்தம் காரணமாக இந்திரபதவி யெய்தினன். காமதேனுவும், கற்பக விருக்ஷமும், சிந்தாமணியும் வணங்கப்பெற்றனன். அப்ஸர ஸ்திரீகள் கானம்பாடியே நடனம் புரிந்தார். நாரதர் முதலிய ஸப்தருஷிகளும் ஜயாவிஜயீபவ! சுரேந்திரநாத! சுந்தர! வாழ்க! வென்றனர் போலும். கண்டனன் அரசன், கொண்டனன் கர்வம். ஒப்புயர்வில்லே னென்றனன். உடனே கண்டனன் றன்னை நரகப்பாழில். ஸ்வர்க்கமே நரகமாய் மாறியதாமே அவன்றனளவில்.

ஜநகவிதேஹ சக்ரேஸ்வரனை எமபடர்தாமும் போக பூமிக்கு வழைத்துமே யேகினர். போதருமார்க்கந் தன்னில் கணக்கிடலரிய கோடிபல்கோடி ஜீவர்கள்தாமும் நரகம்துய்த்து அவதியுமுற்று அலறிக்கிடந்தனர். விதேஹன் கண்டனன்; வேண்டேன் ஸ்வர்க்கம், இத்தனைச் சோதரர் அலக்கணுறுவதைக் கண்டும் யான் கன்மங்கொண்டு போகம்புசிப்பனோ? நீவிர்செல்க—யான் ஈண்டை வசிப்பே னிவருடன்கூடி யென்றனன். கிங்கரர் பலரும் எமனிடம்சென்றுகூறினர் யாவும்; வைவஸ்வதன் எழுந்தான் உடனே ஓடோடிவந்தான். தெய்வத்தைத் தரிசித்துச்சிரமேற் கரத்தைக் கூப்பிப் போற்றினன். ஐயனே அண்ணலே-அன்புருவான மெய்யனே-துய்யனே-செய்யனே - அறிவாய் நின்ற அப்பனே-அழகே! தேவரீர் வருகவருக! தேவர்களார்த்தனர். துந்துபிமுழங்கும். சிவமணங்கமழும் சின்மயாநாத! தேவருலகம்நுந்திருவடிப்போதைச்சிரமேற்கொள்ளப்பெருந்தவம் செய்ததே. இவண் வதியவும் தேவரீர் திருவுளங் கோடல் நேரிதோ! என்றே தொழுதனன். தேவதேவனைத் தினைத்துணைப்போதும் பிரிந்தறியாத மன்னர்பிரானும், அற்றன்றைய! யானியற்றிய தவம் நற்றவமாயின் அத்தவங்கொண்டு இவர்களை விடுமின். ஏற்றுமின் இவர்களை சுவர்க்கபூமியில்; நரகம் துய்க்க ஆளில்லையென்னில் யானே ஈங்குவதிய இசைவல் என்றனன். என்றனனாக, நரகம் மறைந்தது. நமனும் மறைந்தான். ஸ்வர்க்கம் நிறைந்தது. கடவுளர் குழுவினர். சங்க முழங்

இயது. சாமமாவீசினர். அங்கங் குளிர்ந்தனர் தேவதாசிகள்; பிரபஞ்சமெல்லாம் பரவசமடைந்தன. சராசரம் யாவும் சந்துஷ்டியடைந்தனவாம்.

82. பிரஸ்நை ;—பூலோகம் எப்போது ஸ்வர்க்கமாய்க்காணும்? உலகமே நரகமாய்த் தோற்றுவதெப்படி? சர்வம் சிவமயம் ஜகத் என்ற சத்தியம் யாவர் மாட்டோ சத்தியமாய் நிகழும்?

உத்தரம் :—புருஷர் ஹரிஹர நாமங்களை சர்வதா ஜபித்துக்கொண்டு காலத்தைச் சத்விஷயமாகச் செலுத்தியும், மகளிர் சுகாதாரவிதிவிலக்குணர்ந்து கொள்ளத்தக்கன கொண்டு, தள்ளத்தக்கன தள்ளி, ஆடவர்மாட்டு அன்பு பூத்தொழுகியும், வர்த்திப்பராயின், நந்தம் கிருஹங்கள் ஸ்வர்க்கங்களேயாம். தத்தம் பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் விவாகத்துக்குரியதாக ஜநாசார சீர்திருத்தச் சபையினரால் வரையறுக்கப்பட்ட வயதை இன்னமும் உயர்த்திக் கல்யாணம் முடித்தல், பெரிய ஜாதிப் பிரிவுகளுக்குட்பட்ட சிறு வகுப்புகளை ஒன்று சேர்த்து அவர்களுக்குள்ளே பந்திபோசனமும் பரஸ்பர விவாகமும் ஏற்படுத்தல், பலமனைவியரை விவாகம் செய்தல் பெரும் பாவமென்றோதல், விதவா புனர்விவாஹப் பிரயத்தினம்செய்தல், ஹிந்துசமூகத்தைச் சார்ந்த பஞ்சமர் அநார்யர் முதலியோரை யாதரத்தோடாதரித்து அவர்களின் உரிமைகளை யனுசரித்து செய்வன செய்தல், செய்வித்தல் முதலிய இன்னோரன்ன விஷயங்களில் ஒவ்வொரு குடும்பத்தலைவனும் தலைவியும் சிந்தாக்கிராந்தரா யாண்டு மிருந்தலே அவ்வக்குடும்பத்தை வீரசுவர்க்கமாக்கி விடுமென்க. தர்மங்களுக்கேற்பட்ட சொத்துகளை துர்விநியோகப்படுத்தும் அக்கிரமங்கள் பட்டொழியுமாயின், ஹிதோபந்யாஸம் செய்துக் காலங்கடத்தும் சாதுக்களின் தற்கால கஷ்ட நஷ்டங்கள் காலக்கிரமத்தில் அனேகமாகக் குறைந்தொழியும். சமுத்திரயானமும், தேசாந்தரப் பிரயாணமும் நம்மனோர்க்கு மனோ விசாலத்தைத் தந்து விந்நாட்டை விட்டு அஞ்ஞான துர்த்தேவதைகளைத் துரத்தி யடிக்கு மென்பது ஸர்வஸாமஞ்ஜஸ மென்க. கீழே பேசப்பட்ட விஷயங்களில் விலக்கான அசத் சாஸ்திர நிபந்தனைகள் தினைத்துணையும் பிரயோசனத்தைச் செய்யா வென்ற விஷயம் நம்மனோர் உள்ளத்திற் கொள்ளல் இன்றியமையாத தென்க. சுபாசுபங்களில் நம்மனோர் அவரவர் சக்தி

யாநுசாரம் செலவிட வேண்டிய தொகையின் குறைந்த அளவு இன்னதென்பது 'க்லிப்தமாக நிர்ணயிக்கப்படவேண்டும். பலர் கலிகாலம் கலிகாலம்' என்று காலத்தை யிகழ்ந்து கபிகளா யொழியாதும் இருகாறுமபோ லல்லாது மேல்வரும் காலத்தைத் தேசாபிமானம் பூத்து ஒற்றுமை வளர்த்து, சோதரவாச்சலிபம் விளைவித்து பெண்மக்களை நன்மக்களாக்கிப் பொன் மக்களைப் பெறப் புண்யங்கூட்டி ஜனசமூகம் இனி துர்ப்பிக்ஷத்தால வருந்தாது க்ஷாமமொழிந்து க்ஷேமமடைவான் மின்சாரமுதலிய வேதுவினல் மழைபெய்வித்தல் முதலிய சிறந்த வித்தையை யூட்டி வுபகரிக்கவேண்டியும் நம்மனோர் யாவரும் வுழைத்தலத் யத்பாவசியகம். பூலோகம் கைலாசமாகும், வைகுண்டமாகும், சத்யலோகமாகும். சைவன் வைணவன் பரஸ்பரம் வாய்ச்சண்டைக்கும் சைர்சண்டைக்கும் முந்தியும், சித்தாந்தி வேதாந்தியைப் பழித்தும், அவனுமே யிவனை யிழித்தும், பிராம்ஹணன் சூத்திரனை வெறுத்தும், சூத்திரன் பிராம்ஹணனை யசட்டைசெய்தும், செட்டிநான் செட்டியே யென்று மொழிந்தும், பிள்ளையானே செல்லப் பிள்ளை யென்று கொஞ்சியும், யாவருங்கூடி பஞ்சமனைப் பறக்கடித்தும், பஞ்சமன் பிறரை யேசிப் பேசியும், பணக்காரன் தன்னைப் புகழ்ந்தே பல்லையிளித்தும், ஏனஜாதியான் படிப்பின்றிப் பன்றியாபொழிந்தும், வறுமையின் கொடுமையாற் பலபேர் அயோக்கியராய் முடிந்தும், செல்வக் கிளர்ச்சியால் சிற்சிலர் கண்காதொழிந்தும், வேசியோடு பழகிய சிலகுலமாதரும் வேசைகளாகியும், தலைவனை யிழந்த தலைவி யவனைப்பே பின்பற்றி வொழுகும் பெற்றியால் தாசியாய் முடிந்தும, நாடகப்பந்தரில் வேசியும் தாசியும், சில குலஸ்திரீகளும் கூடிக்குலாவி, அநாசாரங்களை யடைவதானும், நறுக்குமீசையும், கிறுக்குச் சடாவும் ஷோக் நடையும், ஜோக் சுந்தரமும் சுகாதீதமெனவே கொண்ட கழிசிறை பெண்டைப்பல்கால் வைது மடித்தும், இடித்தும், புடைத்தும், உயிருடன் பொசுக்கிக் கொல்வதானும் நரகம் யாவு மீண்டைப் போந்தன. மலமற்ற முத்தர் ஸ்வர்க்கமுங்காணார், நரகமுங்காணார், உலகங்காணார், அவனிவன் காணார் அவதியுங்காணார், பொங்குங் காணார், மங்குங்காணார், எல்லாஞ் சிவமாய், யாவும் ஹரியாய், விளங்கு மவர்க்கு.

83. பிரஸ்னை:—பகவான் விதித்த கர்மயோகம் யாதோ கூறுக.

**உத்தரம்** :—பலாபலன் கருதாது கர்மம் செய்தல் அன்பர்க்கழகாம். நிஷ்காம்ய கர்மம் கைவல்யத்தைக் கூட்டுமென்க: அவரவர் தத்தம் கடமைகள் யாவையும் இச்சையநிச்சை யின்றியே செய்தல் அமைவுடைத்தென்ப. எல்லாம் சிவார்ப்பணம் என்றே அறைதல் சிவத்தைத் தருமாம். காம்யகர்மம் முத்தியைத் தராது. "சமது:கே சமே கிருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ———ததோயுத்தாய யுஜ்யஸ்வ நைவம்பாப மவாப்யஸி" என்றெழுந்த வமிர்த வசனங்களை யுலகம் தரிசிக்க!

84. பிரச்னை :—இஷ்டதெய்வோபாசனையிற் சொக்கிக் கிடந்த வாண்மகன் தற்போதம் கழலநின்ற துண்மையோ?

**உத்தரம்** :—பாலபாஸ்கரன் என்ற திவ்யநாம முடையானொருவன் கோமளாங்கி என்ற பெயரிய பெண்மணியைப் பூர்வஜன்மாந்தர சுகிர்தம் கூட்ட வொரு பகல்கண்டு மையல்கொண்டு மெய்யே பரவசம் அடைந்தனனென்க. லாவண்ய ஸமூகமே உருத்தரித்துப் போந்ததென்ன விளங்கிய யுவதியின் அமிர்தகுரலைக்கேட்டுக் கிள்ளை நாணிற்று. குயிலுநாணிற்று. சுரேத்ரேந்திரியம்தான் கானம் கோராது. அவளழகைச் சித்திரிக்க பிரமன் செய்த தவமே தவமாம். ஒப்பிடலரிய மேனியைக்கண்ட தங்கம் பங்கமாயிற்றென்க. திருமுகங்கண்ட சந்திரன்றானும் கரைந்து மறைந்தான் கங்கைவார்சடையில். அன்னமும் நடை மெலிந்தொழிந்ததாம். பாஸ்கரனுடனே பூங்கொடி நின்ற காட்சியோ "காமனுமிரதியும் கலந்த காட்சியா" மென்பர் கண்டோர். அறிவே, யன்பே, எனதுயிர்க் காதலீ! கலைமாதோ நீ கண்மணியென்றான். எனதாருயிர் கவர்ந்த வஞ்சி, என்னைத் தருவை கொல் எனக்கேயென்றான். காமர்பூங் கொம்பே! கற்பிற்கரசி! நினது முல்லை முகைதவழ் முறுவல்கண்டேன்!. முத்தைக் கண்டேன்! முத்து முத்தாய் மொழிவையோவென்றான். தேன்மொழியாளும் பாஸ்கர சுவாமியைச் சித்திரம்போ லணுகி நின்றனள். காந்தளன்ன கரங்கொடுதழுவி அருளொடும் நோக்கினன் அண்ணறன்னையே. நம்புமானதுதரம் மின்னலை யொத்துப் புளகாங்கிதமாய்ப் பாய்ந்தோடியதே. பரஸ்பரம் காதல் காய்த்து விளங்கினரிருவரும். பகலவன் போந்ததும் ஒளித்ததும் காணார்; பலபகல் ஒருபகலாகக் காலங்கடத்தினர். ஐம்புலன்களும் ஏககாலத்திற் சுகித்தனபோலும். குலுங்கக்

குலுங்கக் குதூஹலங் கொண்டனர். கொச்சைத்தமிழ்கொடு கொஞ்சினர்; சுவப்நாவஸ்தையில் டனேதேகங்கண்டவர், கொண்டவர் சாரையும் சர்ப்பமு மருவிய காட்சியாமென்ன விளங்கினர், சாக்கிராவஸ்தையில், சரச சம்பாஷணை சர்வதா செய்தனர். நம்பன்—ஸ்திரீ ரத்நமே-நின்னுள்ளன்பே என்னுயிரைப் போஷிக்கு மமிழ்தாயிற்றென்றான். நங்கை:-புருஷஸிம்ஹமே:! எற்கு மெய்வாழ்வளித்த குணமுகிலே! காண்கிலேனென்னை, நுஞ் சமுகந்தன்னில் துணையே, தோழா, நாதா, என்றனள். நண்பனும் - பிராணசகி! அமிர்தமழை பொழியும் நின்னதரம் கண்டேன் பவழங்கண்டேன். அமிழ்தைப் பருகி அன்புருவடைவலென்றன னென்க.

இன்னணம் சின்னாள் ஒழுகுவார் தம்மைப் பழையதீவினைப் பிரித்ததேபாவம். பூரண சுகமும், ஐக்ய சந்துஷ்டியும் யாரே வடைந்தார் இம்மண்ணுலகத்தே. தீவினை தன்னை நொந்தான் செல்வன். குணவதிசுமுகியைக் கனவினு மறவான். கனவோ நனவோ வென்பான் பன்முறை. என்னினு மினியாள் எங்கே என்பான். மேல்வருஞ் ஜநநத்தாயினும் கூடுவனென்பான். உருவெளித் தோற்றம் யாண்டுங் காண்பான். உயிரே துறந்த உடலென நின்றான். அவன்றன் னுருயிர்த்தோழன்! ஐய! பாஸ்கர! நின் சிந்தை எங்கே? கூறுகவென்றான். பந்துவையுணரான் பாஸ்கரன். புலவர்பெரும! நின்புந்தி யாண்டையதோவென்றனன் மீண்டும் ஆத்மபந்து. ஞான சூர்யனும் வாகிந்திரியத்தை யடைந்தானில்லை. உண்மைச் சினேகனும் வெதும்பினனுள்ளம்; உடனே உணர்ந்தன னுண்மை. அச்சோ! அறிவேன் நின்னிலைமை என்றனன். பாஸ்கர! பாஸ்கர! வென்பதிற் பயனிலை. சூழ்ச்சி யொன்றுண்டு காண்பே னதன்பயனென்றனன். உடனே கோமளாங்கி! கண்ணே! வாய்திறவாயோ? என்றே கூவினன். ஏனேனென்றனன் காதலன்றானும். எனவே, சிறுவனும் கோமளவநிதை மயமாய்க் கிடந்த சம்பவத்தைக் கண்டபின்னரும், ஜீவன் ஒழிந்து சிவமாய் நிற்றல் அசம்பவமென்று கூறத்துணிவரோ நல்லறிவாளர். பெண்பாலாக வாண்பால் மாறியே யொழிந்தது சம்பவமானல், அன்பிற் சிறந்தோர் அன்புருவாக 'நிற்றலருமையோ? அன்பிற் கரைந்த வறிவுடையன்பரே அறிவர்போலும் அன்பின் அருமை பெருமை.

85. பிரஶ்நை :—அன்பின் பெருமை யாதோ கூறுக.

உத்தரம் :—

அன்பு சிவமு மிரண்டென்பா ரறிவிலார்
அன்பே சிவமாத லாருமறிகிலார்
அன்பே சிவமாதலாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருப்பாரே.

86. பிரஶ்நை :—அன்புருவாயினோர் ஆனந்த சாகரத் தழுந்தித்திளைத்தல் என்னணம் கூறுக.

உத்தரம்:—கருங்கடல் மறைத்த காந்தமலைதான் மேலே நகர்ந்த மரக்கலந் தன்னிற்கிடந்த இருப்பாணியாவையும் இழுத்தெறிந்ததே யாக, மரத்துண்டெல்லாம் வெவ்வேறாகி, நாவாய் தன்னை சமுத்திரத்தமிழ்த்திய சம்பவம்*காணீர். பரமாத்மாவும் சிதாபாஸனை இழுக்கும் போது தற்போதம் ஒழிந்த ஜீவன் சிவத்தைச் சார்ந்த சம்பவம் நேரிதாம்.

87. பிரஶ்நை :—அறிவுருவான யோகியும் ஞானியும் தமக்கென வோரிடம் அமைக்கா தொழிவதேனோ?

உத்தரம் :—எலிவளைகளையே சர்ப்பங்கள் பல, இடமாய்க் கொள்ளும். ஒருவளை யொழிந்தால், மறுவளைதேடும். யோகியும் ஞானியும் கிருஹஸ்தன்றன்னால் ஸம்ரக்ஷிக்கப்படுவர். ஒரு நாட்டங்கிய வகத்தினைக் கோரார் வழிநாடன்னில்; பிற்றை நாட்களில் ஊரூர் சென்றே பிக்ஷையேற்றுண்பர்.

88. பிரஶ்நை:—முத்தன் உலகொடும்பழகுதல் கூடுமோ ?

உத்தரம் :—சர்ப்பந்தன்னைப் பிடிப்போமானால் விஷத்தாற்பட்டு வீய்வோமன்றோ? பாம்பைக்கட்டும் நெறியினர் பலர் தாம் பயமொன்றின்றிப் பாம்பைத் தொடலும் பூஷணமென்னக் கரத்தேயணிந்துந் திரிதலும் காண்மோ. அஞ்ஞானம் சுட்டு, மெஞ்ஞான மயமாய் நின்ற மஹானும் ஈஷணத்திரயத்தாற் றுபமடையானென்க.

89. பிரஶ்நை :—சஞ்சிதப்பெருமலை நசித்த லெப்போதோ?

உத்தரம்:—பாழறைதன்னில் பலநாள்வதிந்த பேரிருள்தானும் ஒரு விளக்கெடுத் திருள் தேடவும் சிக்காதொழிந்தது சத்யம். "காகமானது கோடிகூடிநின்றாலு மொருகல்லின் முன்னெதிர் நிற்குமோ?

கர்மமானது கோடிமுன்னே செய்தாலு முன் கருணைப் பிரவாகவரு ளைத்தாகமாய் நாடினரை வாதிக்கவல்லதோ" வென்றனரன்றே நந் தாயுமானரும். பல்லாண்டு சேர்த்த பஞ்சப்பொதியும் ஒரு நொடிப் போதில் ஒரு தீக்குச்சால் பஸ்மமானதைக் காணிரோவுலகிர். கற்பூரக் குன்றம் கால்நாழிகைதனில் கரைந்து மறைந்ததைக் கண்கூடாகக் கண்டோம். மலைபோற் போந்த தீவினையெல்லாம் பனிபோலொழி யும் ஐயன்கடைக் கணிப்பராயின்.

90. பிரஶ்னை:—சர்வஞ்ஞனது அபாரசக்தியை யோராற்றாற் கூறுக.

உத்தரம்:—"கடல்நிலமாக, நிலம் கடலாக
அணு மலையாக, மலை யணுவாக
திருணம் குலிசமா, குலிசந் திருணமா
நெருப்புத் தண்ணிதாத், தண்பனி வெப்பமா
வன்பரைப் பரைஞரா, வறவோரல்லரா
ஆக்குசின் குடில வற்புத லீலையால்
மாக்களிப் பெய்தும் வன்பரம் பொருளே
உன்வலி நினைத்தபேருள்ளமு நடுங்குமே!"

91. பிரஶ்னை:—மும்மலமிகுந் தொழுகு கேணியென்றும், மொய் த்து வெங்கிருமி தத்து கும்பியென்றும், பெரியோர் பழித்த விம் மல தேகத்தைப் பெரியோர் தாமும் எனைபோற்றி வாழ்ந்தனர்?

உத்தரம்:—வெற்றுப்பெட்டியை யாரே பத்திரப்படுத்தினர்? தங்கநாணயம், நவமணிக்குவியல், முத்துமாலை, மோகனமாலை, முழு மணித்தாழ்வடம் முதலிய பல்பொருள் சேமிக்கப்பட்ட பெட்டியைக் காவார்யாரோ? பரசிவன் மகிழ்ந்து கோயில்கொண்ட காரணமதனால் மனிதவுடம்பை சிவ க்ஷேத்ரமாக்கொண்டு போற்றிப் பாதுகாத்தனர் புண்யர்.

92. பிரஶ்னை:—சாஸ்திரவிசாரணைக்கின்றியமையாதனயாவை?

உத்தரம்:—விவேகம்-வைராக்யம்.

93. பிரஶ்னை:— இக்கலியுகத்திற்குகந்தயோகம் யாதோ கூறுக.

உத்தரம்:—பக்தியோகமே சிறந்ததென்ப.

94. **பிரஶ்நை**:—ஈசனை யூனக்கண்கொடு காண்ட லொண்ணுமோ?

**உத்தரம்**:—வாசமூக் கறியு மன்றிவாய் செவிவிழி மெய்தேரா
பேசவா யறியுமன்றிப் பின்னையோர் புலன்றேராது
நேசமார் தொண்டர்ஞான நேத்திரங் கொண்டுகாணு
மீசனை முகத்தின் கண்ணு விகத்தில்யார் காணவல்லார்.

95. **பிரஶ்நை**:—"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா! வுன்றிருவடி என்மனத்தே-வழுவா திருக்கவரந் தரவேண்டு மிவ்வையகத்தே" என்றறைந்த புண்ணியரின் அன்பு எத்தகைத்தோ கூறுக.

**உத்தரம்**:—"அனமிலார்க் கனமாய் வாழவக மிலார்க் ககமாய்த் துன்ப
மனமுளார்க் குவப்பாய் நோயின் வருந்துவோர்க் கருமருந்தாய்த்
தனமிலார்க் கரும்பொன்னாய் நற்றாய் தந்தை யிலார்க் கன்னூரா
யினமிலார்க் கினமா யார்க்கும் யாவுமா யிசைத லன்பே"

96. **பிரஶ்நை**:—யாண்டுஞ் சாம்பவ மணிகள் தழுவி வாழும் கொள்கைகள் யாவையோ?

**உத்தரம்**:—தந்தைதாய் குரவனுசான் சங்கர னிராசை பெண்டிர்
மைந்தர் பல்லுயிருஞ் சுற்ற மாசிலா வீசனன்பர்
அந்தமில் பிறவியேழு மடுபகை யென்ப தோர்ந்தேம்
எந்தையார் கருணைகாட்டி யெம்மையாட்கொண்டவன்றே.

97. **பிரஶ்நை**;—பரம்பொரு டன்னைப் பணிவுடன் போற்றப் புண்ணியம் கூட்டும் ஒருநெறி யெதுவோ?

"ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத்தார்களே."?

93. **பிரஶ்நை**:—பரமனுக்குச் சைவர்கூறும் சிறப்பிலக்கணம் யாதோ கூறுக?

**உத்தரம்**:—முக்கண்ணுடைமையுஞ் செக்கர்ச்சடையும்
மதிபொதி முடியு நதிவளர்சென்னியும்
விடைகடா அய்ச்செல்லும் மிடலுங் கடல்படு
நஞ்சுவீறுத்திய களமும் எஞ்சிய
இடையுடை மடவரல் கெழுமியவுடையும்
அன்னவள் விழிக்குடை மானுந் துன்னிய

மழுவுங் கொழுந்துடை எழுநாமேனியும்
தமருகக் கையுந்தழல் கவிகையும்
அஞ்சலென்கையும் எஞ்சாவரந்தரு
பஞ்சின்மெல்லிய பல்விரற்கையும்
ஊன்றிய கழலுந் தூக்கியவடியும்
தேன்றுளிகொன்றையும் ஊன்றுதலையும்
எற்புச்சட்டகம் முத்தலைச்சூலம்
உட்குறுதலைப்பிணை பெட்புறத்தாங்கலும்
கரியுரிபோர்த்த விரிவறுபெருமையும்
அரவரைக்கசைத்த ஆண்மையும் அகல்விசும்
பணைதருமுடிக்குலங் கடுப்பச்செறிவுறு
புள்ளிப்புலித்தோல் போற்றிய மருங்கும்
கள்ளப்பாசங் கழித்தலி னின்பத்
தெள்ளமிழ் தருத்தலில் அரன் சிவனெனும்பேர்
கொள்ளலும் பிறவுங் கோனிவனெனவே
விரித்துரை சிறப்புக்குறிகளா மெனத்
தெரித்துரைசெய்குவர் தெள்ளறிவோரே.''

99. **பிரச்னை:**—சைவம் முக்கியமா யெத்தனை வகைப்படும்?

**உத்தரம் :**—இருவகைப்படும். அவை, வைதிக சைவமென்றும் தாந்த்ரீக சைவமென்றும் பேசப்பெறுமாம். அத்வைதசைவம் வைதிகமாகும். துவிதசைவம் தாந்திரீகமாகும். அத்வைதிகளே பிரமவாதிகள்; துவைதிகள் பலரே மாயாவாதிகள்: வைதிகோத்தமர்க்கு வேதம் பிரமாணம், மற்றையோர்க்கு ஆகமம் சிறப்பாம்.

100. **பிரச்னை :**—வைதிகசைவர் காணும் சிவமும் அவரல்லார் பலர்கூறுஞ் சிவனும் என்ன சம்பந்தமுடையார் கூறுக.

**உத்தரம் :**—காரணகாரிய சம்பந்தமே!

காரணமதனலன்றிக் காரியமுளவாய்த்தோன்ற
காரணமொழியவேறு காரியமின்மையாலே
காரிய மனைத்தினுக்குங் காரணமதுவே யுண்மை
யோர்தரவிரண்டும் வேறென்றியம்பிடல் இயல்பின்றாமால்,

என்றும்,

"இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமானனா யெறியுங் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாசமாயட்ட மூர்த்தியாகிப்

**பெருநல முந்தற்றமும் பெண்ணு மாணும்:**
பிறருருவும் தம்முருவும் தாமேயாகி
நெருநலையா யின்றாகி நாளையாகி
நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே'' என்றும்

"வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே"என்றும்.

"கூறும்நாவே முதலாகக் கூறும் கரணமெல்லா நீ
தேறும்வகைநீ திகைப்பும் நீ தீமைநன்மை முழுதும் நீ
வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மை யுன்னை விரித்துரைக்கின்
தேறும்வகையென் சிவலோகா திகைத்தாற்றேற்றவேண்டாவோ" என்றும்

வைதிகப்பெரியோர் பணித்ததைப் பணிந்து அடங்குவதாக பாமரவுலகம்.

ஐந்தாம்வேதமென்று பேசப்பெறும் மகாபாரதத்தில் அஸ்வத்தாமாவின் வுற்பத்தி சம்பந்தமாய்ப் படிக்கப்படும் கதையில் கேட்கப்படும் சிவன் பிரஞ்ஞாஸ்வரூபமான பிரமமன்று. வண்டோதரியுடனே காந்தத்தி லளவளாவியிருந்து ராவணேஸ்வரன்வரவைக்கண்டு குழவி வடிவெடுத்து லீலைபுரிந்த சிவனும் காணகாரியரஹிதப்பரம் பொருளன்று. பஸ்மாசுரனுக்கு வரனைத்தந்து கரைந்து மறைந்த ருத்ரன் துரீயபதார்த்தமன்று. பாணாசுரனுக் காட்பட்டுக் கண்ணனோடு போர்புரிந்து முதுகுகாட்டி யோடி நடித்த மூர்த்தமும் மூலப்பொருளன்றும். எல்லாந் தானாகவிளங்கும் பரசிவம் வருவதெங்கே? போவதெங்கே? இருப்பதெங்கே! கிடப்பதெங்கே!

**101.** பிரஸ்னை:—புராணம் சத்யமோ வசத்யமோ கூறுக:

**உத்தரம்:**—ஸ்தூலபுத்திகட்கு யாண்டுஞ் சத்யம். சூக்ஷ்மவறிவினர்க் கொரோவழி யுண்மையாம். அறிவாயினோர்க் கெப்போதும் பொய். கடவுள் வந்தார் உண்டார், கோபித்துக்கொண்டார், கோபந் தணிந்தார், தூதும்சென்றார்,பிணங்கினோரை யிணங்கச்செய்தார். அடிமைகள் தம்மைப் பூததேகத்தோடும் கூட்டிக்கொண்டுசென்றார் கைலை என்ற ஞானம் குழந்தை ஞானமாம். நம்பாட்டன் பாட்டி, பூட்டன் பூட்டி சிரவணஞ்செய்யத் தக்கவை யிவையே. சைவபுராணம் ஓதும்

புலவீர். சிவனடியார்க்குப் பிள்ளையை யறுத்துக்கொடுக்கவும் இசைவிரோ நீவிர் கூறும் கூறும். சிசுஹத்தி தானும் சேராதொழியுமோ. ஹரன்பணிசெய்யும் காளையொருவன் கூடிச்சுகிக்க விச்சைகொண்டுமே துணிந்தேகேட்டால் அகமுடையாளை யன்புடனளிக்கும் அன்பரின்றுண்டோ ஆரியமணிகாள் !

102. பிரஶ்நை :—கல்வியறிவென்ற கன ஐசுவரியத்தை யார்ஜித்த ஹிந்துக்களிற் பெரும்பாலார் என்னணமின்று ஒழுகா நின்றனர்?

உத்தரம் :—தத்தம் மனச்சாக்ஷிக்கு முற்றும் விருத்தமாக வொழுகுதலையே தர்மமாகத் தாந்தா மேற்கொண்டு வர்த்திப்பாராயினரென்க.

‘ 103. பிரஶ்நை :—கீழே பிரஸ்தாபித்த நம்மவரது பேதை நிலைமைக்குக் காரணம் யாதோ ?

உத்தரம் :—நந்தேசத்துப் படிப்பறியாப் பெண்கணிகளினது பரிதாப நிலைமையே காரணமாகுமென்க. உலகத்தோடொத்து வாழ்தலையே தத்தம கடப்பாடெனக் கொண்ட பெரும்பான்மையோர் அத்தை, பாட்டி, அப்பாத்தை, தலைவி, பேரத்தி, வைப்பாட்டி முதலிய ஸ்வஜனங்களையே தத்தம் உலகமெனக் கொண்டொழுகா நின்றது பாவம் பாவம். பெட்டிகோட் கவர்ன்மெண்டாரது சட்டநிரூபணங்களையும் தள்ளி நடக்கும் ஆற்றலமைந்தார் வெகு சிறுபான்மையர். வேப்பஞ்சிலை யுடுப்பதேயாயினும், வெறியர்வேட மணிவதேயாயினும், தெய்வமாடலைக் காண்டலாயினும், இரட்டைக்கடாப்பலி யிடுவதாயினும் கவுனணிச் செல்வி யிட்டதே சட்டம் சொன்னதே மந்திரம்.

104, பிரஶ்நை :—மேல்வருங் காலந்தன்னில் தேசாபிவிர்த்தியை யுண்மையாய்க் கோரிய வுத்தமபுருஷர் ஒழுகவேண்டிய முறைமையும் யாதோ ?

உத்தரம் :—நல்லோர் பலரும் தத்த மளவில் திரிகரண சுத்தியைப் பிரகாசிப் பித்தல் அத்யாவசியகம், வாய்மை, வாய்மை, வாய்மை யென்றே வாய்மை மந்திரம் அநுசந்தானம் செய்தலவசியம், அஹிம்ஸா: பரமோதர்ம: என்ற போதனை யாவராலும் தழுவப்படலு மவசியம் அவசியம். யாவர் தாட்சண்யத்தையும் வெ.

[illegible]ள் செய்யாமல் ஹ்ருதய பூர்வகமாக அவரவர் தத்தம் வியவஹா[illegible] முடித்தல் வேண்டும். யாவர் தடுப்பினும் பொதுநன்மை [illegible]லைப் பெரும் புண்யமாகக் கொள்ளல்வேண்டும். பழையவநா[illegible]ரங்களைக் கடிதல்வேண்டும். புதிய வாசாரங்கள் பற்றவும் வேண்டும். சொல்வதுபோலவே நடத்தல்வேணடும்' வரைவின் மகளிர் கூட விருந்தே குலமகளிர் பலர் கூத்துப்பார்த்தல் கூடாவொழுக்கமே; கூற்றன் கோயிலைக் காணவேண்டிக் குமரன் ஒருவன் விலை மாதுடனே மணமாதையுமே கூட்டிசசெலற்க. கள்ளையுண்டே களியாட்டயர்ந்த கடையர்கள் தாம் தநதநு செல்வச சிறார்க்கும் காதலிகட்கும் கள்ளைக் கொடுத்தல் கொடுமை கொடுமையே. பொதுமகள் தன்னை கலியாணமென்று நடுவீட்டில வைத்து நமஸ்கரித்தல் அபாயமபாயம். நினைத்த விடத்திறகு நாரியர்பின்னே நாரியர் செல்ல விடுத்த லசங்கதம். ஆண்பேய் கொண்ட பெண்பேய் தன்னை ஆண்பேய் கொண்டே ஆட்டிவைத்தல் ஆரியர்க்கழகோ?, முழுக்கு வைத்தலும் தெப்வம வைத்தலும், குளிசங்கட டலும், சக்கரம் அடைத்தலும் முழுமகன் செய்கை. ஜோசியம் கேட்டு; பல்லியைக் கேட்டு, அசேதன பதார்த்தங்கள் தம்மைக்கேட்டு மணவினை முடிந்தல் துக்கம; யாண்டுந துக்கம.

105. பிரஶ்னை :—இனி நாமாஶ்ரயிப்பக் கிடந்த பெருநன்மைகள் யாவை? அவலம்பிக்கத் தக்கன வானசுகிர்தங்கள் யாவை? தழுவிவாழ்வடையத் தக்க காமங்கள்யாவை? இந்து ஜன சமூகத்தினது க்ஷேமத்திற் கின்றியமையாதன வானதாமங்கள் யாவை?

உத்தரம் :—தத்தம் குடும்பத்துப் பெண்களை ஒவ்வொரு விவேகியும் இயன்றவளவில் போதுமான கல்விபயிற்றுவித்தல் இன்றியமையாததே. மங்கைப் பருவமடையாப் பெண்கட்கு வதுவையைச் சிந்தியாதொழிதல் பெரும்புண்யமாகும். இருபது வயசையடைந்த வாண்மக்கட்கே நம்மாரிய சோதரர் கடிமணம் புரிய எண்ணங்கொள்வதும் நன்மையைப் பயக்கும். சாதிவித்யாஸம், ஆசாரவித்யாஸம் பாராட்டாமல் படித்தவர் பலரும பந்திபோசனம் பண்ணல் [illegible]பலனைத் தரும். விதவாவிவாஹம் செய்த குடும்பத்தினரையும், இங்கிலாந்து அமெரிக்கா முதலிய தூரதேசம் சென்று திரும்பிய பலரையும் ஆதரவு செய்து போற்றல் நாகரிகமாம். வாய்மை

யாளராய்ப் பலரும் வாழ்க. ஹிந்து மதத்தை விட்டுப் புறமதம் புகுந்த பலரும பழையமதத்தைக் கோருவாராஞல் அன்னவர் தம்மை மீண் டும் நம்மதத்திற் சேர்த்துக்கொள்வதுநலனே.

பாட்டைப்பாடி வோட்டைக் கொடுக்கவும் நாட்டியம் செய்து நட்டைக்கெடுக்கவும், மற்றும் பற்பல விஷயத்திற்காகவும் வேசியைத் தாசியை வேண்டி யழையற்க. நாட்டியப்பெண்கள் கச்சேரி மண்டபம் நன்மையை நாடினோர் நாடாராக ! விஸ்கிஷாப்பும், ஷாம்பேன்பாடி லும், கஞ்சாமுதலிய லாகிரிப்பண்டமும் கனவிலும் பெரியோர் சிந்தை தன்னை யடையா தொழிக.

அடக்கம் அடக்கம் (*Humility*) (*False Humility*) என்றே போதித்தல் யாண்டும் நன்மையை விளைக்கா தென்க. இந்தியர் கட்குக் கூழேபோதும், சோறேவேண்டாம். உள்ளதே போதும். இல்லாத சம்பத்தைக்கோரி நைவதெற்றிற்கு? சொந்தவூரைவிடோம். வெளியூர் செல்லோம். இருந்த விடத்தே அரைவயிறு கஞ்சி கிடைப் பதே பெருமை. ரங்கோன், சிங்கப்பூர், மோரீஸ், நேடால் போதலெற் றிற்கு என்ற பிரசங்கம் அற்ப பிரசங்கம், இந்த வுலகம் பொய்: அந்த வுலகம் மெய், என்றும் வியவஹார தசையில் மயங்கிக் கூறற்க. பார மார்த்திகம் ஆத்மார்த்தமாகும். அதையு மிதையும் ஒன்றென மரு ண்டு தத்துப் பித்தாவென்றுளறிட்டே காலங்கடத்தல் ஈனர் செய் கையாம்.

ஐரோப்பிய ரடைந்துள்ள அபார கௌரவங்கட்குக் காரண மான ஊக்கம், உற்சாகம், வாய்மை, விடாமுயற்சி, மனோதிடம், பொ றுமை, காருண்யம், தற்காப்பு, தேசாபிமானம் முதலிய அரியபெரிய குணங்களை நாமுமடைந்து வாழ்தல்வேண்டும்.

நந்தேசத்து ஏழ்மைத் தன்மையை யறவே வொழிக்கவேண் டுவ யாவும் செய்தல் வேண்டும். எந்த விஷயத்திற்கும் கவர்ன்மெண் டாரையே எதிர்பார்ப்பதும், இங்க தேசத்தை யடையும் கருப்பு, பிளேக் முதலிய எல்லா துர்ப்பிக்ஷங்கட்கும் கவர்ன்மெண்டாரை நோவதும் பேதைமை. பீ. ஏ., எம்-ஏ., பீ. எல்., எம். எல் முதலிய பாரிய பட்டம் பெற்றவர் உத்தியோகத்திற்காக கவர்ன்மெண் டையே எதிர்பார்த்தலும் ந்யாயவிரோதம். பணக்காரர்கள் பணத்

தைப் பெட்டியிற் பூட்டிப் பூசைசெய்யாமலே பொதுநன்மைகருதி பற்பல ஜாய்ண்ட் ஸ்டாக்கம்பெனி முதலியனவுண்டாக்கிப் பல்லாயிரம் பிரஜைகளைக் காத்தல் வேண்டும். வியவசாய பாங்கிகள் ஆங்காங்கு மேற்படல் வேண்டும். ரூபாய்க்கு ரூபா வட்டி வாங்கும் பலகொடியரையும், நெல்வட்டியென்று நாசஞ்செய்யும் நரயமபடரையும் நல்லோர் சேர்தலடாதடாதே. பஞ்சமர் நன்மையைப் பலரும் கோரல் இன்றியமையாததாம. தாழ்ந்த பிறசாதியார் க்ஷேமத்தை நாமுட அபேக்ஷித்து நடத்த லத்யாவசியகம்.

106. பிரஶ்நை:—நந்தேசத்தாரது பிரார்த்தனையாதோ?

உத்தரம்:—இந்தியவநிதை எங்கிலண்ட் புமானை மணமாலையிட்டு மகிழ்ந்தநாள் தொட்டே நம்மவா யாவரும் சீரியராகிசிறந்தனரென்ப. வயிரம் பெற்று முடிநீண்டோங்கிய எங்கிலேண்ட் விருக்ஷத்தை யணைந்து சுகித்தது இந்தியவல்லி. நம்பன் நங்கையைப் போக்கிய பதார்த்தமாய்க் கொண்ட நாளே நன்னாளாகும். ராஜேஶ்வரன்றன் முடியிற்றுலங்கும் முழுமணிதானுமே இந்தியாவேன்ப. இந்தியா கிடைத்ததால் பிரிட்டிஷ் ராஜ்யம் மகத்தான கௌரவமடைநத துண்மை. பிரிட்டிஷ் கொடியும பறந்த காரணத்தான் இந்தியாவும் நிர்ப்பயமெய்தி கீர்த்தியடைந்தது. சற்குணவதியா மிந்தியமாது திருவருள் கூட்டவடைந்த வாழ்வும யாண்டும் ஓங்கிக் குறைவின்றி வளர்வான் பலாண்டு கூறுதும; கூறுக உலகே. பாதியுலகத்தின் மீது தமது ஆஞ்ஞா சக்கரத்தைச் செலுத்தி உலகமுழுவதும் ஜயஜயவென்று போற்றவே பாஸ்கரன்றனையும் யாண்டும் பரநத தம் ராஜ்யந்தன்னி லஸ்தமிக்காது நடக்க ஆஞ்ஞாபிக்கும் ஆற்றலுடையராய்ப் பிரகாசித்துத் தெய்வத்வம் அடைநது தெய்வமென விளங்கிய நமதுலோக சம்ரக்ஷகி, முடிமன்னர் முடிதாழ்ந்து வணங்கும் பொற்போதை நந்தேசத்தினர்க்குத் தாரகமாய்க் கொடுத்தபெருமாட்டியார், இல்லறம் நடத்துதலின்னண மென்றே உலகத்தார்க்குக் காட்டிய பெருந்தகைப் புண்ணியர், ஜீவகாருண்யமே ஸ்வரூபமாவிளங்கிய சுசீலை யாவார், யோக்கியதை யுள்ள இந்தியர் அன்பை இறையாக்கொண்டு அன்புடனவரை யாதரித்தவர், பிரஜைகளடைந்த சுகதுக்கத்தைத் தமது சுகதுக்கமாகக் கொண்டே நின்றவர், பொறுமையில் பூமியை வென்றவர், தேவரை நாணச்செய்

தவர், ஞானிகள் போற்றும் ஞானமடைந்தவர் லோகமாதாவெனப் பொலிவுற்று விளங்கிய சக்ரேஸ்வரி விக்டோரியா சக்ரவர்த்தினிப் பெருந்தகைத் தேவியார், பூமி தேவிக்கு ஓர் திலகமென விளங்கியும், அஷ்ட லக்குமிகளும் சேவைசெய்து கிடக்கும் பெரும்பாக்யம் பெற்றும், தேவர் கோனும், சங்கரன்றோழனும் பொறாமை யடையத் தக்க போக - போக்யங்களை அடைந்தும், கின்னரர் காந்தர்வர் முதலியோரும் இதுவே பூலோக கைலையென்று மயங்கி நோக்கும் பெருமைபெற்றும் பிரகாசமடைநத தமது ராஜஸ்தானப் பொன்னகரை விட்டு ஸ்வர்க்க மாள்வான் கருதிச சென்றனரென்ன மறைந்த சமயம், அளவிடலரிய துக்கத்தாழ்நது அலக்கணுற்ற நமதுதேதேசம், அஸதமித்த பாநு மீண்டு முதயமானதை யொப்ப, மாக்ஷிமை தங்கிய நமது எட்வாட் VII. சக்ரவாததிப் பெருமான் செங்கோலேற்ற சமயம் துக்கவிருளி னின்றும் வெளிப்போந்து சூர்யன் ரஸ்மியைக் கண்ட வுலகமென்ன குதூஹலமடைந்து 'மெய் வாழ்வுற்றது லோகப் பிரசித்த மாகையால், பண்டிதர் பாமரர் நல்லோர், தீயோர் பெரியர், சிறியர், யாவா தமக்கும் சொல்லாமலே விளங்கக்கூடிய விஷயமொன்றன்றே ! நம பெருவள்ளலார் மகுடாபிஷேக மடையும் நன்னாள் நெருங்குவதாதலால், அந்நாளைத்தான் பொன்னாளாக நாமெல்லோரும கொண்டாடுவதே நமது இன்றியமையாக் கடப்பாடென்க. இததேசமுழுவதும் விழாக் கொண்டாடி சநதோஷ சாகரத்தாழ்ந்துத் திளைப்பரென்பதுந திண்ணம். நமது சக்ரவர்த்திப் பெருந்தகை தமக்கும், சக்ரவர்த்தினிப் பிராட்டியாக்கும், பல்லாண்டு கூறிக் கிடப்பதொன்றே நமது கடமையாம். ஹிமசேது பர்யந்தம் நம்மனோர் அடையும் பெருவாழ்வுக்கு அளவுகூற லசாத்ய மென்ப. சுபம். சுபம்.

107. பிரஸ்னை:—ஆங்ல நாட்டு ஆரியர் தம்மை இந்திய நாட்டு ஆரியர் என்னணம் போற்றி யொழுகவேண்டுவதோ?

உத்தரம் :—ஆங்லநாட்டார் தந்தைதாய் ஸ்தானங்க டம்மை வகித்தவராவார். இந்தியர் பலரும் குழவிகளாவார். தத்தஞ் சிறார்க்கு வேண்டியவற்றைப் பக்குவமுணர்ந்து செய்தரூனும் தாய்தந்தையர் தம் கடப்பாடாகும். சிறுமிகள் சிற்சிலவேளை யடைவான் கோரும் பலவிஷயங்கள் தகாவெனப் போதிப்பதும் தாயின் கருணையாம். நியாயமிருப்பினு மிலாமற்போயினும் தத்தம் தாயை தாம்தாம் சே

னும் சிறுவர்க் கியல்பே. மதலைச்சொற் கொடுதாய் தந்தையரைக் களிப்பிக்குமாற்றலு மடையப்பெறாத குழவிகட்கு, ஜ்வரம் மாந்தம் படுவன் முதலிய துக்கம் நேர்ந்துழி, அவையொழித்து அக்குழவிகளது சுகத்தை யபேக்ஷித்தல் பெற்றோரைப்பொறுத்த விஷயமே. அற்றேனும், அறிவு முதிரப்பெற்ற யுவதியும், பாலயனும் தத்தமக்குப் பற்பல கவலைநேர்ந்துழி அவையொழிப்பான் கருதித் தத்தம தாய்தந்தையரிடமே பணிவுடன் விண்ணப்பித்தல் பேதமோ யாமெனக. நந்தாய்தந்தையரால் நமது தேகமதனைப் பாதுகாப்ப வேற்படுத்தப்பட்ட செவிலித்தாயாவர் சக்கரவர்த்தி பெருவள்ளது பிரதிநிதி, பிரதேச கவர்னமெண்டுதலைவர், முதலிய உந்நத நரோத்தமபதவிவாழ் பாக்யசாலிகள், சிலவேளை பரதவாக்ஷத்து பிரஜாசமுசத்தின் குறைவுபாடுகளை உள்ளபடியே அறிந்து பரிகாரம் செய்யக் கடமை யாவதும் சகஜம். அவ்வப்போது நங்குறைகளை யெடுத்து இயம்பி நன்மையை நாடச்செய்தலும் நம்மனோர்க் கழகாம். நமது ராஜாங்கத்தாரின் கடாக்ஷவீக்ஷண்யலேசம் பெற்றுச் சிறப்படையலே பயனாக் கொள்க. ஜனப்பிரதிநிதிகள் ஒற்றுமையாக வாழ்தலும் அவசியம். ஹிந்துக்களும், பௌத்தர்களும், ஜைநர்களும், மகம்மதியர்களும், நேடிவ் கிறிஸ்தவர்களும், யூரேஷியரும், ஐரோப்பியர்களும் பரஸ்பர சோதர விஸ்வாசம் வளர்த்தல் வேண்டும். ஐரோப்பிய உத்தியோகஸ்தர்கள் இத்தேசத்தைத் தத்தம் சொந்த சேர்பாக்கக் கருதி வாழ்வடைதல் வேண்டும். உபகார சம்பளம் பெற்றபின் ஐரோப்பிய பிரபுக்கள் இந்தியாவிலேயே வசித்தலுமழகே. வெள்ளைக்காரர் நம்மனோரைக் கறுப்பு மனுஷரென்றிழித்துக் கூறல் தர்மமாகாது. இந்தியர்களும், ஆங்கில துரைகள் துரைசானிகளை அந்நியராகக் கருதலொண்ணாது. சுபாசுபங்களில் ஐரோப்பியரும், இந்தியா பலரும் மருவி வாழ்தல் ஈஸ்வர சம்மதம். சமயம் வாய்த்துழி வாய்த்துழி ஐரோப்பா அமெரிக்கா ஜபான் முதலிய பிறநாடு சென்று கல்வியைப் பூர்த்தியாக்கி நந்தேசத்திலே ஞர் திரும்பிவரலும் இன்றியமையாததே. பற்பல மதஸ்தரும் சிற்சில சமயம் ஒன்று சேர்ந்து ஈஸ்வரோபாசனை செய்யவுங் கருணை எம்பிரானரும் கூட்டுவர் போலும்.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி

முற்றுப்பெற்றது.

---

ஓம் தத்சத ஓம்.

# பிழை திருத்தம்.



I. வது—பிரஶ்நையில் (a), (b) குறிப்பிட்ட உட்பிரிவுகளை யொருதனிப் பிரஶ்நையாகவும், (c) (d) குறிப்பிட்ட உட்பிரிவுகளை வேறு தனிப்பிரஶ்நையாகவும் கொள்க. அப்படிக்கொண்ட வழி 108 பிரஶ்நைகள் பாககியாம.

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 3 | 9 | கநிஜ | கநிந |
| 24 | 10 | ஆறுமுகனை | அறுமுகனை |
| 35 | 22 | மகதி | மகதீ |
| 38 | 28 | ஆவும | யாவும |
| 41 | 14 | ஒறு | ஒரு |
| 46 | 12 | வமிழ்துதாள | வமிழ்துதாளே |
| 83 | | | |
| | 16 | பிள்ளை | பிள்ளே. |
| [illegible] | [illegible] | செவிவிததாயாவர் | செவிலித்தாயாவர். |